# மனச் செம்மலும்
## பொன் விழா ஆண்டும்

**2**

**வா**சகர்களை இருபத்துமூன்று ஆண்டுகள் முன் என்னுடன் இணைத்து அழைத்துச் செல்கிறேன்.

இதே ஆகஸ்டு மாதம் 1958ஆம் ஆண்டு. தேதி 22.

இந்த நாள் தமிழ்த் திரைப்பட உலகின் வரலாற்றில் பொன் எழுத்துக்களைப் பொறித்த நாள்;

பொன்மனச் செம்மலின் புகழுக்கு முத்திரை பதித்த நாள்.

இன்னும் சொல்வதென்றால்,

அயராத உழைப்புக்குப் பரிசு கிடைத்த நாள்;

ஆற்றிய பணிக்கு ஆறுதல் கிடைத்த நாள்;

இணையற்ற ஓர் இலட்சியக் கொடி விண்ணுயரப் பறந்த நாள்;

ஈட்டிய புகழுக்கு எல்லை காண முடியாமற் போன நாள்;

உலக மொழிகளின் படங்களுக்கெல்லாம் சவால் விடப்பட்ட நாள்;

ஊருணி நீர் நிறைந்தாற்போல் யாவரும் பயன்பெற்ற நாள்;

எல்லோரும் புதிய அனுபவம் ஒன்றைக் கண்ட நாள்;

'ஏற்றம்' என்பார்களே, அதன் இலக்கணம் விளங்கிய நாள்;

ஐயப்பாடு சிறிதளவுமின்றி வெற்றிக்கு விதையூன்றிய நாள்;

ஒரு புதிய 'ரெக்கார்டை' உருவாக்கிய நாள்;

ஓங்கு புகழ் பெற்ற திரைக் கலையை மேலும் பன்மடங்கு உயரச் செய்த நாள்;

ஔவை பாடிய, 'அரிது அரிது', 'பெரிது பெரிது' என்ற பாடலுக்கு ஓர் உயிரோவியம் பிறந்த நாள்!

உயிரெழுத்துப் பன்னிரண்டையும் முதல் எழுத்தாகக் கொண்ட பன்னிரு வாக்கியங்களால் 1958, ஆகஸ்டு 22ம் நாளைப் பாராட்டியிருக்கிறேன். காரணம், நாடோடி மன்னன் வெளிவந்து, வெள்ளித் திரை அந்த நாளில் தங்கத் திரையாகி ஒளிவீசிய சிறப்புத்தான்; தமிழ்ப் படத் துறையில் படைப்பு, கலை நுணுக்கம், படிப்பினை, வசூல் முதலான பல நிலைகளில் உயிரோட்டம் ஊட்டிய காரணத்தால் உயிரெழுத்துக்களால் குறிப்பிட எண்ணினேன்.

ஒரு சாதனையைப் பலர் போற்றும்போது கூட ஒருசிலர் தூற்றுவதென்பது உலகியற்கை.

ஆனால் 'நாடோடி மன்னன்' திரைப் படத்தை எல்லோருமே போற்றினார்கள். தூற்றத் துடித்துக் கொண்டிருந்தவர்களும் போற்றினார்கள்; போற்றுவதைத் தவிர வேறு வழியே இல்லை என்று சொல்லுகிற அளவுக்குப் புதிய சரித்திரம் படைத்த படம் அது.

அதைப் படைத்தவர், இயக்கியவர், இரட்டை வேடங்களில் நடித்தவர், மற்றும் அதன் ஆக்க வேலைகள் அனைத்திலும் இரண்டறக் கலந்தவர் பொன்மனச் செம்மலே ஆவார்!

ஆம்; அந்த ஒருவரே ஆவார்!

அந்த ஒருவரின் நம்பிக்கை, துணிவு, உழைப்பு, தியாகம், திறமை, முழுமையான ஈடுபாடு ஆகியவை அனைத்தும் ஒன்றுசேர்ந்து தமிழ்த் திரை உலகம் என்கிற கலைக் கோயிலுக்கு ஒரு பொற் கோபுரம் எழுப்பி வைரக் கலசம் ஒன்றை அமைத்துத் தந்தன என்று சொன்னால் மிகைபடக் கூறியதாகாது.

இடது:

- மோகினியில் கத்தி சண்டை
- மருதநாட்டு இளவரசியில் வி. என். ஜானகியுடன்
- நாடோடியில் சரோஜாதேவியுடன்
- நினைத்ததை முடிப்பவன் படத்தில் லதாவுடன்





இந்த 'நாடோடி மன்னன்' படத்தில் பொன்மனச் செம்மல் நாடோடியாகவும் மன்னனாகவும் நடித்தார்.

பலதரப்பு மக்களிடையே, பல்வேறுபட்ட எண்ணங்களைப் பரப்பிக் கொண்டிருந்தது, இந்தப் படம், அது திரைக்கு வருவதற்கு முன்பு.

''ஆம்: சிலர், ''எம். ஜி. ஆர். நாடோடியாகிவிடப் போகிறார்'' என்றார்கள்.

இன்னும் சிலர், ''எம். ஜி. ஆர். கதை முடிந்தது'' என்றார்கள்.

மேலும் சிலர், ''இவருக்கு ஏன் இந்த வேலை! யார் இவரைப் படம் தயாரிக்கச் சொன்னார்கள்! நடித்துக் கொண்டிருந்தால் போதாதா?'' என்றார்கள்.

இப்படிப் பலரும் பேசியதற்குக் காரணம், நாடோடி மன்னன் கர்ப்பவாசத்தில் இருந்த போது, அதை உருவாக்கும் பொறுப்போடு அதைச் சுமந்து கொண்டிருந்த தாய்க்கு (எம். ஜி. ஆருக்கு) எத்தனையோ சங்கடங்கள், சோதனைகள், இழப்புக்கள் எல்லாம் ஏற்பட்டு வந்ததே ஆகும்.

இந்தப் படம் எடுக்கத் தொடங்கிய காலத்தில், தமிழ்த் திரைப்பட உலகின் தலை சிறந்த முன்னணி நடிகராக விளங்கிக் கொண்டிருந்தார் இவர்.

மலைக்கள்ளன், அலிபாபா, குலேபகாவலி தாய்க்குப் பின் தாரம், மதுரைவீரன், சக்கரவர்த்தித் திருமகள், புதுமைப் பித்தன் முதலான படங்களின் மூலம் ஓங்கு புகழ் பெற்றுக் கூடவே திரைக் கலைக்கும் சிறப்புத் தேடித் தந்திருந்தார்.

எந்தத் திசையிலும், எந்தக் கோணத்திலும் ''தமிழ்ப் பட வெற்றிக் கதாநாயகர் எம்.ஜி. ஆர்'' என்று ஒருமுகமாகப் பேசத் தொடங்கிய காலகட்டம் அது.

''நாடோடி மன்னன் படத்தைத் தயாரிக்கும் பொறுப்பில் ஈடுபடாமல் இருந்தால், அதற்காகச் செலவிடப்பட்ட பொருள், நேரம் உழைப்பு இவை மூலம் பல வெற்றிகளைக் குவித்திருக்கக் கூடுமே'' என்று அனுதாபிகள் பலர் கருதினார்கள்.

எதிரிகள் (இவர்கள் பொன்மனச் செம்மலுக்கு உடன் பிறந்தவர்கள்!) ''நாடோடி மன்னன் வெளிவரமாட்டான்'' என்று ஆருடம் சொன்னார்கள்.

''சாப்பிடுவதற்கு முன் போண்டாவையும், பஜ்ஜியையும் பிழிந்து எண்ணெயைத் திருப்பித் தந்தால் விலையில் 10% தள்ளுபடி!''




இப்படியெல்லாம் கருதப்பட்டுப் பேசப்பட்டதற்கு என்ன காரணம் என்று பார்க்க வேண்டும்.

திரட்டிய செல்வத்தில் அற நெறிகளில் வழங்கியது போக மீதம் என்று இருந்த அனைத்துச் செல்வத்தையும் விழுங்கிவிட்டிருந்தது 'நாடோடி மன்னன்' படம்.

''யானைக்குத் தீனி போட்டுக் கட்டுபடியாகாது'' என்பார்கள்.

'நாடோடி மன்னன்' படத்தையோ நூற்றுக்கணக்கான யானைகளின் கூடாரம் என்று சொல்ல வேண்டும்:

பணம் தண்ணீர் போல் இறைக்கப்பட வேண்டிய படைப்பு. அரண்மனை முதலான அரங்கங்கள், காட்சி ஜோடனைகள், விலையுயர்ந்த ஆடை, அணி கலன்கள், தளவாடங்கள், எண்ணற்ற நடிகர்கள்... இப்படி செலவினங்கள் கூடுதலாக உள்ள படம்.

இயக்குநர், நடிகர், தயாரிப்பாளர் என்ற மூன்று பொறுப்புக்களும் ஒருவருக்கே.

இயக்குநருக்குப் படம் எல்லா வகையிலும் சிறப்பாக வரவேண்டும் என்ற ஆர்வம், துடிப்பு இவை இருப்பது இயற்கை.

தயாரிப்பாளருக்கு பட்ஜட்டுக்குள் படம் முடிய வேண்டுமே என்ற கவலை; பொறுப்பு இவை இருப்பது இயல்பு.

இங்கேயோ இரு பதவிகளும் ஒருவர்மீதே விழுந்ததால், இயக்குநர் தயாரிப்பாளரை மிஞ்சிவிட்டார். அதாவது, 'என்ன செலவானாலும் படைப்பு சிறப்பாக அமையவேண்டும்' என்று ஆணையிட்டுவிட்டார் இயக்குநர்!

டைரக்டர் விரும்புவதைத் தயாரிப்பாளர் மறுக்க முடியாது அல்லவா!

செலவு, செலவு, ஒரே செலவு.

வேறு படங்களில் நடித்தால் பணம் வரும்; இந்தப் படத்தில் பல பொறுப்புக்கள் ஏற்பட்டதால் இதை முழுமூச்சாக முடித்துப் பிறகுதான் மற்றப் படங்களில் நடிக்க வேண்டும் என்கிற நிலை.

படமோ, இழைத்து இழைத்து உருவாக்கப்பட்ட இலட்சியக் கருவூலமாக வளர்ந்து கொண்டிருந்தது. அந்தக் கருவூலத்தை நிரப்புவதற்கு வேறு கருவூலத்தின் திறந்த கதவு மூடப்படாமலிருந்தது.... இதனாலேயே பலரும் பலவிதமாகப் பேசினார்கள். ஆனால், இரவு பகல் எந்நேரமும் வாஹினி ஸ்டுடியோவிலேயே இருந்தார் பொன்மனச் செம்மல்.

படப்பிடிப்பு, படத் தொகுப்பு முதலான பணிகள் இடைவிடாமல் நடந்தன!

இப்படிக் கர்மயோகியாக, எடுத்த காரியத்தை எப்படியும் நல்ல முறையில் முடிக்க வேண்டும் என்கிற வேகத்தில் உழைத்தார்.

அவரது உள் மனத்திற்குள் ஒரு நம்பிக்கை இருந்தது.

''கடமையைச் சரிவரச் செய்தால் விளைவு வீண்போகாது'' என்பதே அந்த நம்பிக்கை.

இளம் பருவத்தில் அவர் ஓர் ஆங்கிலப் படத்தைப் பார்த்திருந்தார். If I were King அதாவது 'நான் மன்னனானல்' என்பது அந்தப் படத்தின் பெயர்.

அன்று முதல் ''நான் மன்னனானல்'' என்ற அந்தக் கேள்வியை அவர் தமக்குள் பலமுறை கேட்டுக் கொள்வது வழக்கம்.

அந்தக்கேள்விக்கு விடையாகவே 'நாடோடி மன்னன்' படமெடுக்கும் முயற்சியில் உந்தப் பட்டார்.

நாட்டிலே பசித் துன்பம் தலைகாட்டக் கூடாது;

வறுமை அகற்றப்பட வேண்டும்.

அடிமைத் தன்மை விலக்கப்பட வேண்டும்.

சர்வாதிகாரம் தகர்க்கப்பட வேண்டும்.

சமதருமம் நிலைநிறுத்தப்பட வேண்டும்.

இப்படிப் பலவிதக் கோட்பாடுகளை மக்களுக்கு வழங்கும் எண்ணம் மூண்டதாலேயே நாடோடி மன்னனைத் தயாரிக்கமுற்பட்டார்.

மக்களுக்கு முன்னால் தன்னையே நாடோடியாகவும் மன்னனாகவும் இரு கோணத்தில் காட்டி, இரு பாத்திரங்களையும் அவற்றின் குணச் சித்திரங்களையும் வெளிப்படுத்தினால் மக்கள் உள்ளங்களில் ஒரு புதிய தத்துவத்தை வேரூன்ற வைக்க முடியும்என்றுஎண்ணினார்.

இதனாலேயே இரட்டை வேடங்களை ஏற்றார். நாடோடி — மன்னன். ஒன்றுக்கொன்று மாறுபட்ட வேடங்கள். இந்த நிலை படத்தில்.

தயாரிப்பாளர் — இயக்குநர். ஒன்றுக்கொன்று மாறுபட்ட இரண்டுபொறுப்புக்கள்!

இது படப் பிடிப்பில் — படப் படைப்பில்.

படத்திலும் போராட்டம்!

படத் தயாரிப்பிலும் போராட்டம்!

நாடோடியும் மன்னனும் ஒன்று கூடினால் தான் நாடு முன்னேறும்; தயாரிப்பாளரும் இயக்குநரும் ஒன்று சேர்ந்தால்தான் படம் முன்னேறும்.

நாடும் முன்னேற வேண்டும்.

படமும் முன்னேற வேண்டும்.

இதுவே பொன்மனச் செம்மலின்நோக்கம்.

பெரிய வேள்வி!

நீண்ட வேள்வி!

அதில் பலவிதமான ஆஹுதிகள்.

கொழுந்து விட்டு எரிந்த நீக்குண்டத்தின் ஜ்வாலையில் பொருள், உழைப்பு, நேரம் எல்லாமே அர்ப்பணம் செய்யப்பட்டன.

துணிச்சலோடு செய்யப்படுகிற காரியத்துக்குத் தோல்வி ஏற்பட்டால் ஏளனம் செய்வார்கள்; வெற்றி ஏற்பட்டால் வருணித்துப் புகழ்வார்கள். இது பொன்மனச் செம்மலுக்கு நன்றாகத் தெரியும்.

தெரிந்து, புரிந்து, சிந்தித்துப் பிறகு அவர் தொடங்கிய பணிதான் இது.

ஆகஸ்டு 22. அதிகாலை; கங்குல் அகன்றது கதிரவன் உதித்தான்.

சென்னை — பாரகன் திரை அரங்கில் நாடோடியாகவும், மன்னனாகவும் காட்சி தந்த பொன்மனச் செம்மலின் உருவங்கள் ஒளிவீசிக் கொண்டிருந்தன.

கதிரவன் உதயத்தோடு ரசிகர்களின் 'க்யூ' வும் உதயமாகி விட்டது.

நிமிடத்துக்கு நிமிடம் 'க்யூ' நீண்டு கொண்டே இருந்தது. நானோ பொன்மனச் செம்மல் அவர்களுடன் லாயட் சாலையில் இருக்கிறேன். என் உடல் அங்கே இருகிறது உள்ளமோ 'பாரகன்' திரை அரங்கில்.!.

காலை 9 மணி அளவில், அவரைச் சந்தித்த நான், ''மிகப் பெரிய வெற்றியை அடையப் போகிறீர்கள்'' என்று சொன்னேன்.

''என் கடமையை நான் செய்து முடித்து விட்டேன். வெற்றியோ,தோல்வியோ மக்கள் தீர்ப்பைப் பொறுத்தது'' என்று அவர் சொன்னார்.

இலட்சக் கணக்கான பொருள்; நேரம், பேருழைப்பு — இவற்றைப் பணயம் வைத்து அவர் உருவாக்கிய 'படம் இன்னும் சிறிது நேரத்தில் பவனி வரப் போகிறது! ஆனால் அவரோ சிறிதும் சலனம் இல்லாமல் மலர்ந்த முகத்தோடு, அமைதியாக என்னிடம் பேசிக் கொண்டிருக்கிறார்!

ஆச்சரியம்தான்! ஆனால் 'சரித்திரம் படைப்பவர்களுக்கு இது சாதாரணம்' என்று எனக்குள் கூறிக் கொண்டேன்.

''உறுதியாக உன் கருமத்தைச் செய்! விளைவைப் பற்றிச் சிந்திக்காதே'' என்று உரைத்த அந்தக் கீதாசாரியனின் வடிவத்தில் பொன்மனச் செம்மலைக் கண்டேன்.

மணி ஓடிக் கொண்டிருந்தது.

''நான் தியேட்டருக்குப் போக வேண்டும்'' என்று ஆர்வத்தோடும் பரபரப்புடனும் கூறினேன்.

என்னை — என் மன வேகத்தைப் புரிந்து கொண்டார். அவரது காரிலேயே அனுப்பி வைத்தார். சென்றேன்.

அப்போது அரங்கிலே ஒரே கர ஒலி. 'எம்ஜியார் பிக்சர்ஸ்' நிறுவனத்தின் டைட்டில் காட்சியை அந்தக் கர ஒலியுடன் கண்டவாறு உள்ளே அமர்ந்தேன்.

படத்தை எல்லோரும் எப்படி ரசிக்கிறார்களென்பதைப் பார்த்து மகிழத்தானே நான் வந்திருக்கிறேன்! (நான்தான் படத்தை அது வெளி வருவதற்கு முன்பே பலமுறை பார்த்திருக்கிறேனே!)

மக்கள் படத்தை ரசித்தார்கள் என்று மட்டும் சாதாரணமாகச் சொன்னால் அது என்னைக் குற்றவாளியாக்கும்.

என் வாழ்வில் அப்படி ஒரு மகத்தான முறையில் மக்கள் ரசித்த மற்றொரு படத்தை அதுவரை நான் கண்டதில்லை!

எல்லையற்ற உற்சாகம்! ஆனந்தம்! பேரானந்த ஆரவாரம்!

''இதுவல்லவா படம்! இவரல்லவா எம்.ஜி. ஆர். இப்படியல்லவா புகழ் பெறவேண்டும்!''

இப்படி வார்த்தைகள் என் நாவிலிருந்து வெளிவந்தன. படம் முடிந்து வெளி வந்து பார்க்கிறேன்.

அடுத்த காட்சிக்கு மக்கள் கூட்டம் கடல் போல் திரண்டிருக்கிறது. வாலாஜா சாலையில் சேப்பாக்கம் கடந்து, 'க்யூ' காணப்படுகிறது!

என் கண்கள் மலர்கின்றன.

என் உள்ளம் குளிர்கிறது.

என்னை அறியாத ஓர் ஆனந்தம்!

பொன்மனச் செம்மலிடம், ''கண்டேன், காணற்கரியதைக் கண்டேன்'' என்று கூறத் துடித்துப்புறப்பட்டு விட்டேன். (தொடரும்)

மேலட்டை வண்ணப்படம்:
—சுபா சுந்தரம்

புகைப்படங்கள் உதவி:
—பிலிம்நியூஸ் ஆனந்தன்

---

அவன்: ''ஸ்டெப் கட்டுக்கு அடுத்த படியா காலேஜ் ஸ்டூடண்ட்ஸ் விரும்பறது எதைத் தெரியுமா?''

இவன்: ''எதை?''

அவன்; ''கிளாஸ் கட்டை!''

- உ. ராஜாஜி

# மேலே: காற்று; கீழே: நீர் இடையில்: உல்லாசம்!



கடல் நீர் நுரையில், காற்றின் வேகத்தோடு துண்டுப் படகில் பாய்ந்து செல்லும் இந்தப் புதிய விளையாட்டை wind surfing என்று சொல்லுகிறார்கள்.

ஹோய்ல் ஷ்விட்ஸர் என்ற கம்ப்யூட்டர் நிபுணரும், ஜேம்ஸ் டிரேக் என்ற விமான டிசைனரும், காற்றின் வேகத்தில் செல்லக் கூடிய ஒரு தனி ஸர்ஃபிங் பேட் (Surfing pad) கண்டு பிடித்தால் என்ன என்று மூளையைக் கசக்கிக்கொண்டு 1960ல் இதை அறிமுகப்படுத்தினார்கள்!

இதன் புகழ் பரவிய வேகத்தில், அடுத்து லாஸ் ஏஞ்சல்ஸ் நகரில் நடைபெறவிருக்கும் 1984 ஒலிம்பிக்கில், முதன் முதலாக இந்த விளையாட்டையும் சேர்க்கப் போகிறார்கள்.

வெள்ளம் மட்டும் மூன்று நான்கு கிலோ மீட்டர் தூரத்துக்கு இருந்தால் போதும். அலையே தேவையில்லை. நடுக் கம்பத்தோடு இணைந்த அலுமினியக் கம்பிகள் இரண்டை முட்டை வடிவில் அமைத்திருக்கிறார்கள். இதைத்தான் பிடித்துக்கொள்ள வேண்டும். இந்த ஸர்ஃப் போர்டில் நிற்கத்தான் முடியும். காற்றுக்கு எதிரான திசையில் பிடித்துக் கொண்டு நின்றால் சைக்கிள் ஓட்டுகிற மாதிரி எளிதாக இருக்கிறதாம். (இதுவரை அதிகபட்சமான வேகம் மணிக்கு 45 கி.மீ.)

இந்தியாவில் இந்த ஸர்ஃபிங் போர்டு தயாரிக்கப்பட்டால், இதன் விலே அப்படி யொன்றும் அதிகம் இராது என்று தெரிகிறது. கோவா கடற்கரையில் ஏற்கனவே இந்த விளையாட்டு வீரர்கள் காணப்படுகிறார்கள்.

சென்னை யாட் கிளப் ரெகட்டா, முதன் முதலாக ஆகஸ்ட் 11 முதல் 15-ஆம் தேதி வரை போர்ட் டிரஸ்ட் சார்பில் இந்த விண்ட் சர்ஃபிங் போட்டியை நடத்தவிருக்கிறது.

தகவல்: சாருகேசி

சென்னையை அடுத்த பழையகாட் ஏரியில் விண்ட் சர்ஃபிங். படம்: இந்தியன் எக்ஸ்பிரஸ்

# நியூட்ரான் குண்டு!

நியூஸ் வீக் ஆகஸ்டு 10உ இதழில் ஓர் உருக்கமான கடிதம்:

''ஹிரோஷிமா, நாகஸாகி மீது நடந்த அணுகுண்டு தாக்குதலால் ஏற்பட்ட வேதனைகளும் துயரங்களும் விரிவாக எங்களுக்கு நினைவிருக்கின்றன. இரண்டு நகரங்களிலும் லட்சக்கணக்கான மக்கள் ஒரே வினாடியில் இறந்து போனார்கள். தவிர கதிரியக்கத்தால் பாதிக்கப்பட்ட ஏராளமானவர்கள் கடந்த 36 ஆண்டுகளாக லூகேமியா (ரத்தத்தில் புற்றுநோய்) வினாலும் இதர வியாதிகளாலும் அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். 'மரணமடைந்தவர்கள் அதிர்ஷ்டசாலிகள்' என்று கருதும்படி உயிர் தப்பியவர்கள் படும் அவதியும் துயரமும் எண்ணிப் பார்க்கவும் மனம் கூசச் செய்வன. இவர்கள் பூவுலகிலேயே நரகத்தை அனுபவிக்கிறார்கள். அணுகுண்டு வீச்சின்போது மரணமடைந்தவர்களின் குடும்பத்தினரும் மற்ற உறவினரும் தங்கள் அன்புக்குரியவர்களை இழந்ததை எண்ணி எண்ணி உருகுகிறார்கள். இன்று அணுகுண்டு தயாரிப்பு உலகின் பல நாடுகளிலும் வேகமாகப் பரவி வருவதைப் பார்க்கும் போது மனித இனத்தின் எதிர்காலம் இருள் மயமானதாகவே எனக்குத் தோன்றுகிறது. அணுகுண்டு யுத்தத்தின் பயங்கரத்தை, அதனை அனுபவித்தவர்கள் அன்றி வேறு யாராலுமே புரிந்து கொள்ள முடியாதா?''

மாஸயூகி டோமிமோட்டோ

அமாகாஸாகி ஜப்பான்

கல்லையும் கரையச் செய்யக் கூடிய இந்தக் கடிதத்துக்கு எஃகு நெஞ்சம் கொண்ட வல்லரசுகளின் பதில்தான் நியூட்ரான் குண்டு! அணுகுண்டு அசுரத்தனமானது; ஹைட்ரஜன் குண்டு அரக்கத்தனமானது எனில் நியூட்ரான் குண்டு இவற்றுக்கும் ஒரு படி மேலே! அந்தப் பயங்கரத்தை வர்ணிப்பதெனில் 'கொல்லும் கலையின் உன்னத நிலை' எனலாம்! விஷமருந்து அடித்து சாரிசாரியாக எறும்புகளைக் கொல்வது போல மக்களைப் பல கிலோ மீட்டர் சுற்று வட்டாரத்துக்குக் கொல்லும் சக்தி படைத்தது நியூட்ரான் குண்டு. இந்தக் கதிரியக்கத்துக்குத் தப்பித் தவறி யாரேனும் உயிர் பிழைத்தால் அவர்கள் ஆயுள் பரியந்தம் வியாதிகளோடு போராட வேண்டியிருக்கும். 'செத்திருக்கக் கூடாதா' என்று ஏங்க வைக்கும்.

அணுகுண்டு அல்லது ஹைட்ரஜன் குண்டு எதிரி நாட்டின் நகரத்தின் மேல் விழும்போது அது நகரையே அழித்து விடுகிறது. கட்டிடங்கள், தொழிலகங்கள், கலைக்கூடங்கள் எல்லாம் தவிடு பொடியாகின்றன. இதனால் வெற்றி பெற்ற நாட்டுக்கு ரொம்ப நஷ்டம். அந்நாட்டு ராணுவம் ஆக்கிரமிப்பது வெறும் சாம்பல் குவியலாகத்தான் இருக்கும்! இடிந்த கட்டிடங்களை, கோயில்களை, தொழிலகங்களை, கலைக் கூடங்களை, ராணுவத் தளங்களை மறுபடி நிர்மாணித்துத் தீர வேண்டும். வெற்றியாளனுக்கு ஏகப்பட்ட வேலை, செலவு.

ஆனால் நியூட்ரான் குண்டு இந்தப் பிரச்னையே இல்லாமல் செய்து விடுகிறது. அது கட்டிடங்களை இடிக்காது; தொழிலகங்களைத் தகர்க்காது; மனிதர்களை மட்டும் கதிரியக்கத்தால் சாக அடித்து விடும்! கால் நடைகளை மடியச் செய்து விடும். புல் பூண்டுகளை அழித்து விடும். அதனால் என்ன? வெற்றியாளனுக்கு நாட்டின் செல்வமெல்லாம் அப்படி அப்படியே கிடைத்து விடுமே!

இப்படி இயங்குகிறது இன்று வல்லரசுகளின் சிந்தனை. எவ்வளவு உயர்ந்த எண்ணங்கள்!

ரஷ்யா 1952லேயே நியூட்ரான் குண்டுகளைத் தயாரித்துப் பரிசோதித்தும் இருக்கிறது. அமெரிக்கா நியூட்ரான் குண்டுகளைச் செய்து குவிப்பதென்றே தீர்மானித்து விட்டது. ஏவுகணைகளிலும் பீரங்கிகளிலும் பயன்படுத்த இந்தக் குண்டுகள் தயார் நிலையில் இருக்கும்!

இந்த அரசுப் போட்டா போட்டியின் தீவிரத்துக்கிடையில் மனித நாகரிகத்தின் சார்பில் பேசும் மாஸயூகி டோமிமோட்டோவின் புலம்பலை யார் கவனிக்கப் போகிறார்கள்? அவர் கட்சியில் வன்மையாக வாதாட ராஜாஜி கூட இல்லையே?


1981 ஆகஸ்டு 23

துன்மதி ஆவணி 7

மலர்: 40 இதழ்: 4





கல்கி





தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

தியாகராஜ உத்ஸவம் நடக்கிறது. பஞ்ச ரத்னக்கீர்த்தனைகள் பாடப்படுகின்றன. இருநூற்றி ஐம்பது மைல் தொலைவிலிருந்து உத்ஸவத்தில் கலந்துகொள்ள மக்கள் வருகிறார்கள். திருவையாற்றில் மட்டுமல்ல, கனடாவிலும், அமெரிக்காவிலும் கூடத்தான்!

டொராண்டோ, க்ளீவ்லேண்ட், தியாகராஜ உத்ஸவங்களில் கலந்துகொண்டு பாடிவிட்டு வந்த வி. ராமச்சந்திரன், மேலும் சொன்னார்:

''பைரவி' என்ற அமைப்பு என்னையும் பேராசிரியர் எம். எஸ். அனந்தராமனையும் அமெரிக்கா அழைத்திருந்தது. இந்தச் சங்கம் இந்தியப் பண்பாட்டினை அங்கே நிலைநிறுத்தி உயர்த்துவதற்காகவும், குறிப்பாக கர்னாடக இசையைப் பரப்பவும் மிகவும் பாடுபடுகிறது. மொத்தம் முப்பத்து நாலு கச்சேரிகள் செய்தேன். மிருதங்கம் வாசிக்க கனடாவில் யார்க் பல்கலைக் கழக இசைப் பிரிவின் தலைவராக இருக்கும் திருச்சி சங்கரன் ஒப்புக்கொண்டிருந்தார்.

''அமெரிக்கர்கள்தானே கர்னாடக இசையைப் பற்றி இவர்களுக்கு என்ன தெரியப் போகிறது' என்று நினைத்து ஏனோ தானோ என்று அங்கே பாடிவிட்டு வந்துவிட முடியாது! டொராண்டோவில் நடந்த கச்சேரிக்கு 700 பேர் வந்திருந்தார்கள். எல்லாரும் விஷய ஞானம் உள்ளவர்களாக இருக்கிறார்கள். தென்னிந்தியர்கள் மட்டுமின்றி அமெரிக்கரும் நான்கு மணி நேரக் கச்சேரி கூட ஆர்வமாய்க் கேட்கிறார்கள். பல ஊர்களில் இரண்டாவது முறையாக என்னை அழைத்துக் கச்சேரி செய்யச் சொன்னார்கள். ஜி. என். பி. நினைவு நாளைக் கொண்டாடினார்கள்!

''க்ளீவ்லேண்டில் உலக மத சிலை இருக்கிறது. பல்வேறு மதங்களைச் சார்ந்த விஷயங்களை அதில் செதுக்கி உள்ளனர். அந்தச் சிலையின் ஒருபுறத்தில் அனந்தசயனரும் பிள்ளையாரும் இருக்கிறார்கள்!

''விமானத்தைக் கண்டு பிடித்ததிலிருந்து சந்திரனுக்குச் சென்ற ராக்கெட் வரை எல்லாவற்றையும் உள்ளடக்கிய கண்காட்சிசாலை வாசலில் இருக்கும் வண்ண ஓவியம் என்ன தெரியுமா? விஷ்ணுவைச் சுமந்து கொண்டிருக்கும் கருடாழ்வார்!''

வி. ராமச்சந்திரனுக்கு ஏற்பட்ட நகைச்சுவையான அனுபவம்: ஒரு பண்டிகை நாளில் இலை போட்டுச் சாப்பிடலாமே என்று வாழை இலைக்கு ஸ்பெஷலாக ஆர்டர் செய்தார்கள். விமானத்தில் ஏற்றிக்கொண்டு வந்து சப்ளை செய்து விட்டார்கள் — ஆனால் பொடிப் பொடியாக நறுக்கப்பட்டிருந்தது! ''என்ன இப்படிப் பண்ணிவிட்டீர்களே'' என்று வினவியபோது கிடைத்த பதில்: ''சுத்தப்படுத்திப் பொடியாக நறுக்கித் தந்தால் தானே சமைத்துச் சாப்பிட வசதியாக இருக்கும்? உங்களுக்கு உதவத்தானே நாங்கள் இருக்கிறோம்!''

பேட்டி: சலன்



# அமெரிக்காவில் பைரவி

# பூரண மனிதர் பூபேஷ்



பூபேஷ் குப்தா பற்றித் தோழர் எம். கல்யாணசுந்தரம் பேசுகிறார்:

“எனக்கும் அவருக்கும் 1948ம் ஆண்டு தொடர்பு ஏற்பட்டது. அன்று முதல் அவரை இறப்பதற்கு முன் கடைசியாகப் பார்த்த வரை, எந்தவித வித்தியாசமும் இன்றி மனம் திறந்து பேசும் நண்பராகவே இருந்தார். பணக்காரக் குடும்பத்தில் பிறந்தாலும் சொத்து வேண்டாம் என்று உதறிவிட்டார். பிரிட்டிஷ் ஏகாதிபத்திய ஆட்சியை எதிர்த்து வன்முறைப் படையை அமைத்துப் போராடினார். லண்டனில் பாரிஸ்டருக்குப் படிக்கும் போது, அவருக்கு இந்திரா காந்தி, பெரோஸ் காந்தி ஆகியோருடன் நட்பு ஏற்பட்டது. அங்கு இருந்தபோதுதான் கம்யூனிஸ்ட் கட்சியின்மேல் அவருக்கு ஒரு பிடிப்பு ஏற்பட்டது. இந்தியாவுக்கு வந்ததும், கம்யூனிஸ்ட் கட்சியின் முழுநேர ஊழியராக மாறினார். ஒரு கட்டத்தில் நான்காண்டுகள் தலைமறைவு வாழ்க்கை நடத்தவும் தயங்கவில்லை. 1952ல் ராஜ்ய சபாவுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அப்போது அவருக்கு வயது 36தான். அது முதல் அவர் இறக்கும்வரை ராஜ்ய சபா உறுப்பினராகவே இருந்தார். ராஜ்ய சபையில் அவர் எழுந்து நின்று பேச ஆரம்பித்தால் போதும், சகலரும் அமைதியாகிப் போவார்கள். நாடாளு மன்ற உறுப்பினர்கள் அவரை அன்புடன் ''பூபேஷ்தா'' என்றே அழைப்பார்கள்.

டெல்லியில் உள்ள அவர் வீட்டில் எப்போதும் 'ஜேஜே' என்று கூட்டம் இருந்து கொண்டே இருக்கும். சமைத்துப் போடுவதற்கு மட்டும் ஒரு வங்காளச் சிறுவனை வேலைக்கு வைத்திருந்தார். மற்றபடி அவர் வேலைகளை அவரே கவனித்துக் கொள்ளுவார். அவருக்கு ஓய்வு கிடைப்பதே அரிது. அப்படிக் கிடைத்தால், புத்தகத்துடன்தான் அவரைப் பார்க்க முடியும். வெளி மாநிலங்களுக்குச் சென்றால் கட்சியின் அலுவலகத்தில்தான் தங்குவார். செலவு வைக்க மாட்டார்.

அஸ்ஸாமில் நடந்த போராட்டங்களுக்குத் தீர்வு காணப் பல யோசனைகளைத் தந்திருக்கிறார். குஜராத்தில், நடந்த, தாழ்த்தப்பட்ட மக்களுக்கு எதிரான போராட்டத்தைத் தீர்ப்பதற்கு இந்திரா காந்தி, இவருடைய யோசனையைக் கேட்டிருக்கிறார். தேசிய ஒருமைப்பாட்டை மிகவும் வலியுறுத்துபவர் பூபேஷ். ராஜ்ய சபாவில் அவருடைய இடத்தை நிரப்புவது என்பது மிகவும் கஷ்டமான காரியம். கம்யூனிஸ்ட் கட்சி தனது பலமான பிரச்சார பீரங்கி ஒன்றை இழந்துவிட்டது.

எமர்ஜன்ஸி நேரத்தில் இந்திரா காந்தியை கம்யூனிஸ்ட் கட்சி ஆதரித்த போதிலும் அப்போது நடந்த அத்துமீறல்களையும் அநியாயச் செயல்களையும்கண்டித்து, தைரியமாக 'நியூ ஏஜ்' பத்திரிகையில் எழுதினார் பூபேஷ்.

அவர் திருமணம் செய்துகொள்ளவில்லை. ராஜ்ய சபா உறுப்பினர் சம்பளமான 1500 ரூபாயில் கம்யூனிஸ்ட் கட்சியின் விதிப்படி 650 ரூபாயைக் கட்சிக்குக் கொடுத்துவிட்டு, மீதியை வைத்துக் கொண்டு வாழ்ந்தார். சிகரெட், குடி போன்ற கெட்ட பழக்கங்கள் அவரிடம் கிடையாது. இப்படிப்பட்ட மனிதருக்கு வயிற்றில் புற்று நோய் வந்ததுதான் துரதிர்ஷ்டம். 1972ல் பெர்லினில் ஆபரேஷன் செய்து கொண்டார். தாம் விரைவில் சாகப்போகிறோம் என்பது அவருக்குத் தெரிந்தே இருந்தது. ஆனால் தமக்கு நோய் இருக்கும் விஷயத்தை அவர், மிகவும் நெருங்கியவர்களிடம் தவிர வேறு யாரிடமும் கூறிய தில்லை. இந்த முறை அவர் மாஸ்கோவுக்குச் சென்றது கூட சிகிச்சைக்காக அல்ல. அங்கு போய், அவருக்கு ஏதோ தொந்தரவு ஏற்பட்டே ஆஸ்பத்திரியில் சேர்ந்திருக்கிறார். ஏற்கனவே அவருக்கு 'டயாபிடிஸ்' வேறு இருந்தது. ஆபரேஷனுக்குப் பிறகு அவர் ஆரோக்கியத்துடன் திரும்பி வருவார் என்றே நம்பிக்கையுடன் இருந்தோம்.

மாஸ்கோவிலிருந்து ராஜ்ய சபா செயலாளருக்கு 'குளிர்கால' கூட்டத்துக்குத் தாம் வரமுடியாத நிலையில் இருப்பதைக் குறிப்பிட்டு, தமக்கு Leave of absence வழங்க வேண்டும் என்று கடிதம் எழுதினார். இதிலிருந்தே அவர் தமது கடமைகளில் எவ்வளவு கருத்தாக இருந்தார் என்பது தெரிகிறது.

கம்யூனிஸ்ட் கட்சியின் பார்லிமெண்டரி குழுவுக்கு அவர் தலைவராக இருந்தார். ஒரு விஷயம் அடுத்த நாள் விவாதத்துக்கு வருகிறதென்றால், எங்களுக்கெல்லாம் முதல் நாளே, குறிப்பு தயார் செய்து கொடுத்து விடுவார். ராஜ்ய சபா விஷயங்களை மட்டுமல்ல, லோக் சபாவில் நடக்கும் விஷயங்களையும் கவனித்துக் கொண்டிருப்பார். இந்த நாட்டின் நாடாளு மன்ற வரலாற்றில் அவர் ஒரு சகாப்தம்.

பேட்டி: ப்ரியன்
படங்கள் : சுபா

✖ கல்யாணசுந்தரம்



சென்னை

அலங்கார் A/C பாலஅபிராமி A/C கிரௌன்

தினசரி 3 காட்சிகள் (12-30, 3-15, 6-30, 9-45) A/C தினசரி 3 காட்சிகள்

மற்றும் தென்னகமெங்கும்





K.பாலசந்தரின்



கவிதாலயம் வழங்கும்

# நெற்றிக்கண்

A

SP.முத்துராமன்

இளையராஜா • விசு • பாபு

ELEGANT

ரசிகமணி பதிப்பித்துள்ள நூல்களில் 'முத்தொள்ளாயிரம்' என்ற நூல் மிகவும் முக்கியமானது. பழந்தமிழ் இலக்கியமான முத்தொள்ளாயிரம் என்ற கவிதைநூல் இரண்டாயிரத்து எழுநூறு பாடல்கள் கொண்ட அரிய நூல். இந்த இரண்டாயிரத்து எழுநூறு பாடல்களில்



ரசிகமணி ரசித்த மணிகள்

# சொல் அரங்கிலே ஒரு நாடகம்

மீ.ப. சோமு

இன்று நமக்குக் கிடைத்துள்ளவை நூற்று எட்டுப் பாடல்களே! மற்றச் செய்யுள் மணிகளைத் தமிழகம் இழந்து நிற்கிறது.

கிடைத்துள்ள அற்புதமான பாடல்களுக்கு ரசிகமணி அவர்கள் கவியுணர்வோடு கூடிய அழகான விளக்கங்கள் எழுதியுள்ளார். இந்த நூலுக்கு சுவை மிகுந்த முன்னுரையிலே முத்தொள்ளாயிரத்திலுள்ள நாடகப் பண்பை ரசானுபவத்தோடு கூறுகிறார்:

''தமிழர்கள் நாடகத்தில் மூழ்கி முழுகினவர்களாகத் தெரிகிறது. சாமான்யமாக இப்போது வருகிற கோவைப் பிரபந்தங்களைப் பார்த்தால் எல்லாச் செய்யுள்களும் நாடகத் துறைகளாகவே இருக்கும். கலம்பகத்தைப் பார்த்தாலும், அனேகமாக நாடகச் செய்யுள்கள்தான். அவ்வளவு ஆசை, நம்மவருக்கு நாடகத்தில்.

ஒரு நீதியைச் சொல்ல வந்த இடத்திலும் ஒரு நாடக நிலையில் நின்று பேசுவார்கள் நம்மவர்கள்.

தோழியைப் பார்த்து நாயகி சொல்லுகிறதாக ஒரு பாடல்: ''நாயகன் ஏதோ தடுக்க முடியாத காரியத்தில் கட்டுப்பட்டிருக்கிறான். சரி, அப்படியானால் வர இயலாது என்று தானே சொல்லவேண்டும் அவன். அதை விட்டு விட்டு, இங்கே நம்மிடம் ஓடி வந்து,'மாலையில் வருகிறேன்' என்றுவேண்டுமென்றே பொய் சொன்னான் அல்லவா?''

இந்த ஆற்றாமையை நாலடியார்ச் செய்யுள் ஒன்று விளக்குகிறதைப் பார்ப்போம்.

*இசையா ஒருபொருள்*
*இல்லென்றல் யார்க்கும்*
*வசையன்று, வையத்(து)*
*இயற்கை; — நசையழுங்கச்*
*சென்றோடிப் பொய்த்தல் —*
*நிறைதொடீஇ! செய்ந்நன்றி*
*கொன்றாரிற் குற்றம்*
*உடைத்து.*

(நசையழுங்க — ஆசையினால் மனஞ் சோரும்படி. நிறைதொடீஇ — தோள் வளையங்களை ஒழுங்காய் அணிந்த தோழியே. செய்ந்நன்றி கொன்றாரில் குற்றம் உடைத்து — ஒருவர் செய்த நன்றிக்கு மாறாகத் தீமை விளைத்தல் போன்ற பாதகமல்லவா இது)

இதுபோலக் காதலனது நாட்டு வளத்தையும் நகர வளத்தையும் சேனை வளத்தையும் நாயகி வாயிலாகச் சொல்லுவது காதல்த் துறையைச் சேர்ந்தது.

முத்தொள்ளாயிரத்தில் வந்துள்ள வர்ணனைகள், தனித்த முறையில் பார்த்தாலே மிக அழகாய், சுவை ததும்புவனவாய் இருக்கின்றன. மேலே சொன்னபடி காதல்த் துறையில் வைத்துப் பார்க்கும்போது, வர்ணனைகளுக்கு எத்தனையோ ஒளிப் படலங்களும் தெளிவும் ஏற்படுகின்றன. இந்த முறையிலேயே வர்ணனைப் பகுதிகளையும் வீரப் பகுதிகளையும் பார்த்து அனுபவிக்க வேண்டும்.

நேரான காதல்த் துறைக்கு வந்தோமானால், பாத்திரங்கள் பேசுவது, தனிப்பட்ட நாடக முறையாக இருக்கிறது. முக்கியமாக நான்கு பாத்திரங்கள் வந்து தொழில் செய்யப் பார்க்கிறோம். முதலாவது, நாயகியாகிய பெண்; அவளது ஆர்வத்தையும் சோர்வையும் எக்களிப்பையும் இன்னதென்று அளந்து சொல்ல முடியாது.

இரண்டாவதான பாத்திரம் பெற்ற தாய். அவளுக்கு ஒரு பயம். ''ஐயோ, காதல் வெறி கொண்டு விட்டாளே நம்முடைய மகள். ஊரார் என்ன சொல்லப் போகிறார்களோ'' என்று மகளைக் கண்டிக்கிற காரியம் ஒரு நாடகப் பாங்கு.

மூன்றாவதாக நாயகியை வளர்த்தெடுத்த

செவிலித் தாயர்கள். அவர்களுக்குத் தங்கள் பெண்களிடத்தில் அமோகமான ஆசை. காதல் விஷயமாய் உற்சாகமாகப் பேசுவார்கள். உளவு செய்யவும் தயாராக இருப்பார்கள். ஊரார் அப்படிச் சொல்லுவார்கள், இப்படிச் சொல்லுவார்கள் என்பது பற்றிக் கவலை இல்லை அவர்களுக்கு.

நான்காவதாகத் தோழிகள். காதல் விஷயமாக எந்த விதமான பேச்சையும் அவர்களிடம் நாயகி பேசுவாள். அவர்களும் உத்ஸாகமாகப் பேசுவார்கள். தூது போகவும் தயாராய் இருப்பார்கள்.

இந்த விதமாக நாடக பாத்திரங்களை வகுத்து வைத்துக் கொண்டால் தான், காதல் கவிகளின் உண்மையான வேகமும் பாவமும் நமக்குத் தெரிய வரும்!''

முத்தொள்ளாயிரம் பாடல்களுக்குள் நுழைவதற்கு முன்பு பாவனை நிலையிலே நின்று அந்தக் கவிதைகளைப் பார்க்க வேண்டிய அடிப்படையான இலக்கிய நோக்கை இவ்வாறு ஆயத்தம் செய்கிறார் ரசிகமணி. இந்த நாடகப் பாங்கை மனத்தில் வாங்கிக்கொண்டால், பிறகு பாடல்களுக்குள்ளே நடைபெறுகிற உணர்ச்சி நாடகங்களைப் புரிந்து கொள்வது எளிது.

ஒரு கவிதையைப் புரிந்து கொள்வது என்பது நிகண்டின் உதவி கொண்டு கடினமான சொற்களைப் புரிந்து கொள்வதுதானா? அந்தப் பாடல் என்ற சொல் அரங்கிலே ஒரு நாடகம் நடக்கிறது. அதைக் காணுங்கள் என்று காட்டுவதே டி.கே.சி.யின் கவிதை விளக்கம்!

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

## டோலாக்கு பம்.... பம்...!

ஆமதாபாத்திலுள்ள இந்தியன் இன்ஸ்டிட்யூட் ஆஃப் மானேஜ்மெண்ட் மாணவர்கள் ஆண்டின் கடைசி நாளன்று புரொபஸருக்குப் புதிய முறையில் பிரிவு உபசாரம் கொடுக்கின்றனர்.

கடைசி 'பீரியட்' முடிந்தவுடன், மாணவர்கள் சேர்ந்து புரொபஸரை ''டோலாக்கு பம் பம்'' தூக்கி உயரே போட்டுப் பிடிப்பது வழக்கம். இதைக்கண்டு பயந்த ஒரு புரொபஸர், கடைசி 'பீரியட்' முடிந்தவுடன் பயந்து ஓடுகிறாராம். விடவில்லை மாணவர்கள். துரத்திப் பிடித்து 'டோலாக்கு' தூக்கி, இறக்கினார்கள்!

- ஜனார்த்தனன்



## ஹெல்மெட் மரங்கள்!

சமீபத்தில் பெங்களூர் போயிருந்தபோது ஒரு புதுமையைக் கண்டேன். ஸ்கூட்டர், மோட்டார் சைக்கிள் முதலியவற்றை சினிமாத்தியேட்டர் போன்ற இடங்களில் விடும்போது, ஸ்கூட்டருக்கு டோக்கன் கொடுப்பது போல, ஹெல்மெட்டுக்கும் டோக்கன் கொடுக்கிறார்கள். ஒவ்வொரு ஸ்கூட்டருக்குப் பக்கத்திலும் ஒரு கம்பை நட்டு அதில் ஹெல்மெட்டை மாட்டி வைத்திருக்கிறார்கள். இதனால் எங்கே போனாலும், குழந்தையைப் போல ஹெல்மெட்டையும் தூக்கிக்கொண்டு போகவேண்டும் என்ற அவசியம் இல்லை.

- ரமேஷ்



## அங்கும் இங்கும்!

1930ம் ஆண்டில் நியூயார்க்கிலிருந்து சான் பிரான்ஸிஸ் கோவிற்கு மூன்று நிமிடம் பேச சுமார் ஒன்பது டாலர் கட்டணம். இப்போது அது போலப் பேச ஒன்றரை டாலர் கட்டணம்! ஆனால் அப்போதைய டெலிபோன் கட்டணத்தில் 437 விமானத் தபால்களை அனுப்ப முடிந்தது. இப்போது ஒன்றரை டாலர் கட்டணத்தில் ஒன்பது கடிதங்கள்தான் அனுப்ப முடிகிறது.

அதாவது டெலிபோன் கட்டணம் குறைந்து தபால் கட்டணம் கூடி விட்டது.

இந்தியாவில் டெலிபோன், தபால் இரண்டையும் நிர்வகிக்கும் அரசு இலாகா இரண்டிற்கும் கட்டணத்தைக் கூட்டிக் கொண்டேதான் போகிறது.... ஹூம்...

-ராமசாமி
-டைம்ஸ் -ரிப்போட்டர்

''இந்தக் காலத்திலே படிப்புக்குக் கொசுறும் கூட மதிப்பு கிடையாது சார்!''

''வாஸ்தவம்தான். மேலத்தெரு ரெங்கன் நாலாம் கிளாஸ்தான் படிச்சிருக்கான். அசோக் பவன்லே சர்வர் வேலை. சாப்பாடு போட்டு மாதம் அறுபது ரூபாய் சம்பளம். பெரிய பண்ணை ராமு ஐ. ஏ. எஸ் பாஸ் பண்ணிட்டு, கலெக்டரா இருக்கான். ஆயிரம் ரூபாய் சம்பளம் மட்டும்தான்! சாப்பாடு கிடையாதாம்!''

- வெள்ளகால் இரா. கந்தையா

"ரசிகமணி" **டி.கே.சி** யின்
நூறாவது பிறந்ததின விழாவிற்கு
எமது வாழ்த்துக்கள்

உண்மையான கவிதைகள் எவை
எனத் தமிழ் மக்களுக்கு எடுத்துச்
சொல்லி அவர்கள் அவற்றை
ரசிக்கச் செய்த மேதை

**டி.கே.சிக்கு**

எமது அஞ்சலி!



**ஜனதாசெம்**
செமண்ட் பெயிண்ட்
தயாரிப்பாளர்கள்

EP-J-101-81

# வேலைக்குப் போகும் பெண்

நடிப்பு: டணால் தங்கவேலு

கதை: சாருகேசி, தமயந்தி

சித்திரம்: செல்லம்

போட்டோ: உத்ரா

**4**

பூங்கா ஒன்றில் தன் காதலி ஜமுனாவுடன் பன்னீர்செல்வம்...

நாம பேசிப் பேசியே இந்த பார்க்கில் இருக்கிற புல்லை எல்லாம் பிடிப் பிடியா பிச்சுப் போட்டுட்டோம். எவ்வளவு பேசியாச்சு!

தலையைப் பிச்சுக் குறதுக்குப் பதிலா தரையைப் பிச்சுக் கிட்டிருக்கோம். சரி, விஷயத்தைச் சொல்லவா?

நேத்து எத்தனை பொண்ணு பார்த்திங்களாம் தானே? ஒங்க அம்மா என்ன சொல்றாங்க, அது இல்லை முக்கியம்?

என்ன மகளுயா நினைக்கிறீங்க? ஏதோ பன்னீர் சோடா, பன்னீர் பாட்டிலை மாதிரி இடமா இல்லே நினைக் கறாங்க. அந்த அப்பாவத்தான் நம்பியிருக் கேன்!

பூங்காவிற்கு வந்த காசிலிங்கம் மகனைப் பார்த்து திடுக்கிடுகிறார்...

அட, பன்னீர் இங்கியா இருக்கான்? பக்கத்துல அழகா ஒரு பொண்ணு வேற! பய அதுதான் பொண்ணு பார்க்கப் போறப்ப எல்லாம் "காப்பாத்துங்க! காப்பாத்துங்க"ன்னு கஜேந்திர மோட்சம் மாதிரி கதறினானோ! காதல் ஜோடு இங்கதான் காதலுக்கிட்டிருக் காளா?

அம்மா பிடிவாதம் தான் தெரியுமே உனக்கு? வேலைக் குப் போற பொண்ணு தான் மருமகளா வரணுமாம்.

ஆம்பிளைங்க வேலைக்குப் பொம்பளைங்க போட்டியா வராங்கன்னு ஒரு எடத்துலே முக்கால் அழ வேண்டியது இன்னொரு எடத்துல வேலைக்குப் போற பொண்ணுதான் - மருமகளா வரணும்கிறது! எங்க பாரு பேஜார்தான்!

நீ சமூகப் பிரச்னையெல்லாம் புதுசு புதுசாக் கிளப்பாதே! இப்பவே எனக்குத் தலையச் சுத்துது.

எங்க அப்பாவுக்கும் அம்மாவுக்கும் நான் வேலைக்குப் போறதே பிடிக்காது. என்ன பண்ணட்டும் நான்?

என்னைப் பிடிக்குதா இல்லை? அப்பப் போய்த் தான் ஆகணும் நீ வேலைக்கு!

வேலை கெடைக்கறது என்ன அவ்வளவு சுலபமா?










பன்னீரு இது ஒன்னோட பிரச்னை மட்டுமில்லே, இன்னையிலிருந்து என்னோட பிரச்னை! அம்மா கொழந்தே, எந்த ஆபீசுலே வேலைக்குப் போற நீ?

அப்பா, அங்கதான் இருக்கு சங்கடம், தர்ம சங்கடம் எல்லாம்

என்னடா சொல்லுற நீ?

அவ வேலைக்குப் போறதில்லே அப்பா! அம்மாவோட கண்டிஷன்படி அவ வேலை பார்த்தாகணுமே?



# குட்டிக் கதைக் களஞ்சியம்

இப்போதெல்லாம் வாரப் பத்திரிகைகளில் குட்டிக் கதைகளுக்கு ஏக மவுசு! பிரபல எழுத்தாளர் ஏகாம்பரம் மட்டும் சும்மா இருப்பாரா? மிக இலகுவாக ஆயிரக்கணக்கில் குட்டிக் கதைகளை எழுதிக்குவித்தார். அவற்றில் சில:



**கொலை விழுந்தது!**

● கருகும்மென்று இருட்டு. கையை நீவி விட்டுக்கொண்டு கருக்கரிவாளை கையில் எடுத்துக்கொண்டு புறப்பட்டான் காளி. 'ஒரே வெட்டு. விழவேண்டும் கொலை' என்று தனக்குள் சொல்லிக் கொண்டே போகிறான்.

மெதுவாகச் சுவரேறிக் குதித்துப் பூனை போல் அடியெடுத்து வைத்து முழு பலத்துடன் அரிவாளால் ஒரு போடு போட்டான். விழுந்தது 'கொலை' — காளி ஒரு வாழைக் குலைத் திருடன்!



**காபரே பார்க்கணும்!**

● "ராஜம் எனக்கு ரொம்ப நாளாஆசை. காபரே போய்ப் பார்க்கணும்னு."

"என்ன சொன்னே, பட்டு... காபரேயா? அசிங்கம். அதுவும் நாம்ப போனால் நல்லா இருக்குமா? எல்லாரும் நம்மையே பார்ப்பாங்க."

"பார்க்கட்டுமே... நாம் மட்டும் என்ன அதிசயப் பிறவியா?"

"இல்லேதான். இருந்தாலும் பேப்பரில் போட்டாலும் போட்டுவிடுவான் பட்டு."

"என் அப்பா அறநிலைய மினிஸ்டர். உங்க அப்பா சன்மார்க்க சபாத் தலைவர். அதனால் நாம் எதையும் அனுபவிக்கக்கூடாதா போடா ராஜம்" என்றாள் பட்டு தன் அரும்பு மீசையைத் தடவியபடியே.

**சங்கிலியைக் காணோம்!**

● நூறு படங்களில் கதாநாயகியாக நடித்திருந்த ஸ்ரீமாதவிப்ரியா கோபமும் அழுகையுமாக இருந்தாள். "என் சங்கிலி எப்படிக் காணாமல் போகும்? சங்கிலி எப்படித் திருடு போகும்? இங்கேதான் சோபா செட்டு மேலே வெச்சுட்டுக் குளிக்கப் போனேன். போலீசுக்குப் போன் பண்ணட்டுமா?" என்று இரைந்து கொண்டிருந்தாள்.

அரை டஜன் வேலைக்காரர்களும் வேலைக்காரிகளும் நடுங்கிக் கொண்டிருந்தார்கள்.

அப்போது வேலைக்காரிகளில் ஒருத்தி. "அதோ... அதோ...சங்கிலி... அதோ!" என்று கத்தினாள். அவள் காட்டிய திசையில் ஒரு சோபா செட்டின் கீழே இருந்து மெள்ள எட்டிப் பார்த்தது சங்கிலி என்னும் அந்த ஐயாயிரம் விலையுள்ள நாய்க்குட்டி!




**பிளீச்! பிளீச்!**

● ஊரடங்குச்சட்டம், கத்திக்குத்து.கொலை என்று ஹைதராபாத் இருக்கும் சமயத்தில், ரயில் தாமதமாக வந்து, அகால நேரத்திலா வந்து இறங்க வேண்டும்? ரயிலடியில் இருந்த லாட்ஜ் மாடி அறையில் பால கோபாலுக்கு இடம் கிடைத்தது. 'இதுவரை கத்திக் குத்துக்குப் பலியானவர் 70 பேர்' என்று நாளிதழ் வயிற்றில் பயத்தை விதைத்தது.

நள்ளிரவு. கீழ் அறையிலிருந்து சில குரல்கள்: "கழுத்தை வெட்டுடா... பிசிர் இல்லாதே வெட்டு காதர், கையை வெட்டியாச்சா? அப்படியே குருட்டி வை... காலைச் சின்னதாக வெட்டிடு..."... இடைஇடையே யாரோ அடிக்க, யாரோ அழுகிறார்கள்.

பாலகோபால் பயத்தால் மயக்கமான தூக்கத்தில் ஆழ்ந்து விட்டார்.

காலையில் லாட்ஜை விட்டு வெளியே வந்து கீழ் அறையைப் பார்த்தார். 'விக்டரி டெய்லரிங் ஷாப்' என்ற போர்டு அங்கு மாட்டப்பட்டு இருந்தது.

—பி.எஸ்ஆர்.



# 8

மோஹன் அகர்வால் மற்ற நோயாளிகளைப் பார்க்கிற மாதிரி பாவனை செய்தான்.

''இங்கே இருந்தா மனசிலே இருக்கிற கொஞ்ச நஞ்ச தைரியமும் போயிடும் போல இருக்கு ஹரி.''

''போகல்ல. உசிரோடயே செத்துப்போயிட்ட மாதிரி இருக்கு.''



''எனக்குப் புரியல்லே.''

''நரகத்துக்கு வந்திருக்கிற மாதிரி இருக்கு. திரும்பின இடமெல்லாம் கையில்லாமெ, கால் இல்லாமெ முனகலும் கத்தலும் அழுகையும்.... உன்னை மாதிரி யாராவது எங்களைப் பார்க்க வந்தாத்தான் இந்த நரகத்திலே கொஞ்சம் ரிலீஃப்.''

''நான் அந்த ரிலீஃபைத் தரத் தயாராயிருக்கேன் ஹரி.''

ஹரி விட்டத்தைப்பார்த்துவிட்டுக் கண்ணை மூடிக் கொண்டான்.

''வேண்டாம்ப்பா. அப்புறம் இங்கே வரணும்கிற எண்ணமே உனக்குப் வராமாப் போயிடும். அந்தப் பாரமே உன்னை எங்கிட்டேருந்து பிரிச்சுடும்.''

அகர்வால் சமாதானமாக அவன் தோளைத் தட்டினான்.

''அரே கமான் யார்! வாட் இஸ் த ப்ராப்ளம்?''

''இங்கே வர்ணும்கிறதை ஒரு கட்டாய வேலையா நினைச்சுண்டு, நிர்ப்பந்தமா நினைச்சுண்டு வராதேன்னேன்''

''ஹரி, என்னை நீ இன்னும் புரிஞ்சுக்கல்லே.''

ஹரி கண்ணை மூடியபடியே சிரித்தான்.

''யாருடைய மனசு எப்படி மாறும்னு யாரும் சொல்ல முடியாது மோஹன்.''

மோகன் அகர்வால் அவனைக் கூர்ந்து பார்த்தான்.

''மாயா வரலையா உன்னைப் பார்க்க?''

இவனுடைய புத்தி நிட்சண்யமானது என்று ஹரி தனக்குள் நினைத்துக் கொண்டான்.

''வந்திருந்தா. வந்து தன் பயத்தைத் தெரிவிச்சுட்டு டாட்டா சொல்லிட்டுப் போயிட்டா.''

அகர்வால் விரல்களால் கட்டில் மேல் தாளம் போட்டான்.

''அவளுக்கும் அதிர்ச்சியாயிருக்கும்.''

''ரொம்ப.''

''ப்ளீஸ். உன்னை நிதானப்படுத்திக்கோ. என்ன நடந்தது?''

''ஒண்ணுமில்லே விடு. இனிமே அவ பார்க்க வரதை அவளுடைய அப்பன் அனுமதிக்க மாட்டான்.''

''அவசரமா நீ எந்த முடிவுக்கும் வரக் கூடாது ஹரி.''

அவன் சிரித்தான்.

''இந்த மாதிரி நிலையிலே நான் எதுக்கு அவசரப்படணும்? மோஹன், கம்ப்ளீட் லோ பாராப்ளிஜியான்னு என்னன்னு தெரியுமா?''

''தெரியாது.''

''இடுப்புக்குக் கீழே சுவாதீனமே இருக்காதுன்னு அர்த்தம். அதாவது எனக்கு.''

மோகன் தன் அதிர்ச்சியைச் சாமர்த்தியமாக மறைத்துக் கொண்டான்.

''டாக்டர் சொன்னாரா?''

''எங்கிட்டச் சொல்லல்லே. பாக்கி எல்லார் கிட்டேயும் சொல்லிண்டிருக்கார்.''

''உங்கிட்ட என்ன சொன்னார்?''

''காலே ஒட்ட வெச்சாவது வீட்டுக்கு அனுப்புவோம். ஸ்ட்ரெச்சர்ல அனுப்ப மாட்டோம்கிறார். இதெல்லாம் என்னைச் சமாதானப்படுத்தற வார்த்தைகள். இனிமே எனக்கு நடக்க முடியும்னு தோணல்லே. மோகன்.''

''ஹரி, நீ இப்படி அதைரியப் படக் கூடாது.''

அவன் வாய் விட்டுச் சிரித்தான். ''அதைரியமா? ஒரு நிஜமான விஷயத்தைச் சொல்றேன் மோகன். நீ ஒரு காரியம் செய்யணும் எனக்கு. எனக்கு க்ராட்சுவட்டி, ப்ராவிடண்ட் ஃபண்டு எல்லாம் எத்தனை தேறும்னு பார்க்கணும். அதை யெல்லாம் பாங்கிலே போட்டு அதில வர்ற வட்டியிலேதான் நான் இனிமே மீதி நாளைக் கழிக்கணும்.''

''அதுக்கெல்லாம் இப்போ அவசர மில்லே ஹரி. நான் சொல்றதைக் கேளு. உனக்கு லீவுக்குக் குறைச்சல் இல்லே. ஆறு மாசம் லீவிலே இரு. இப்ப ஆஸ்பத்திரி செலவெல்லாம் ஆபீஸ் பார்த்துக்கும். ஆஸ்பத்திரிலேருந்து டிஸ்சார்ஜ் ஆற சமயத்துக்கு உன் நிலைமை எப்படி இருக்குன்னு பார்ப்போம்.''

''எப்படியும் ஆபீஸ்லே பழைய வேலை செய்ய முடியாது என்னாலே.''

''இப்பவே எந்த முடிவுக்கும் வராதே ஹரி.''

''ஓ.கே. ஓ.கே. அப்புறம் என்னுடைய மோட்டார் சைக்கிள் என்ன ஆச்சு? நான் அதை மறந்தே போனேன். ரொம்ப டாமேஜ் ஆயிருக்கா?''

''இல்லே. கொஞ்சம் நசுங்கியிருக்கு. கன்

# அந்தி நேரத்து உதயங்கள்

வாஸந்தி



ணாடி உடைஞ்சிருக்கு. போலீஸ் கஸ்டடியிலே இருக்கு. நீ ஆத்தரைசேஷன் லெட்டர் கொடுத்தால் நான் அதை வாங்கி உன் வீட்டிலே வெச்சுடறேன்.''

''என் வீட்டிலே வெக்க வேண்டாம். நீ வெச்சுண்டு என்ன ரிப்பேர் பண்ணணுமோ பண்ணி நல்ல விலை வந்தா வித்துடு. பணத்தைப் பாங்கிலே போட்டா வட்டியாவது வரும்.''

மோகன் சங்கடத்துடன் சிரித்தான். ''என்னது நீ வட்டி வட்டின்னு சரியான மார்வாடி மாதிரி!''

''ஆமாம். முன்னே நேரம் எனக்கு ரொம்ப முக்கியமா இருந்தது. இப்போ பணம் ரொம்ப முக்கியம். என் தேவைகளைக் கவனித்துக்கொள்ள நான் இனிமே ஒரு ஆளை வேறே வெச்சுக்கணும். ஆயுஸுக்கு.''

சில விநாடிகள் மோகன் பேசாமல் இருந்து விட்டுப் பிறகு எழுந்தான்.

''சியர் அப் ஹரி. நீ நினைக்கிற அளவு நிலைமை மோசமாஇருக்காது. நான் அடிக்கடி வருவேன். வெதர் யூ லைக் இட் ஆர் நாட்.''

அவன் கண்ணைத் திறக்காமல் ''தாங்க்யூ'' என்றான்.

பூட்ஸின் ஒலி மெல்ல மெல்ல தொலைவுக்குப் போய்விட்டது.

மோகன்வந்து போனது இரண்டுநாளாக மனத்தை உறுத்திக் கொண்டிருந்த உறுத்தலுக்குச் சற்று சமாதானமாக இருந்தது. ஆத்திரக்காரன். ஆனால் நல்லவன். உதவக்கூடியவன் அவன் ஒருத்தன்தான் என்று உணர்கையில் இத்தனை பெரிய உலகத்தில் நான் திடீரென்று எப்படி இப்படித் தனியாகிப் போனேன் என்று திகைப்பாக இருந்தது.

அந்த மாயாவிடம் எத்தனை குறும்பு செய்திருப்போம்! நாளைக்கு மனைவியாகப் போகிறவள் என்கிற சுதந்திரத்தில் எத்தனை உரிமை எடுத்துக் கொண்டிருப்போம்! அதையெல்லாம் அவள் அத்தனை சுலபமாக மறந்து விடுவாளா? சமய சந்தப்பம் தெரியாமல் நம் நினைவைத் தாக்கும் நினைவுகள் அவளையும் தாக்காதா?

''நான் எந்த வகையிலே உனக்கு உதவறதுன்னு புரியல்லே!'' என்று உபகாரமாகச் சொல்லிவிட்டுப் போனவள் பிறகு வரவில்லை.—

ஒவ்வொரு தடவையும் இந்தப் பிரக்ஞை அவனை ஒரு உலுக்கு உலுக்கிற்று.

அவள் நம் எதிரில் இந்த அகர்வால் உட்கார்ந்திருந்த தொலைவில் உட்கார்ந்திருந்தால் போதும் என்று அவளுக்கு ஏன் புரியவில்லை? அந்த மிருதுவான கையின் ஸ்பரிசம் நம்மேல் பட்டால் மனத்தில் ரணம் ஆறும் என்று—

''உன் தலை என்ன கனம் கனக்கிறது ஹரி!''

''அதிலே விஷயம் இருக்கு பெண்ணே!''

''கல்லோ களிமண்ணோ, இருக்கும்.''

''இந்தக் களிமண்ணை நம்பித்தான் எங்க கம்பெனியே ஓடறது!''

''ஆ. இப்பப் புரியறது. இந்தக் கனம் மண்டைக் கனம்!''

அவள் மடியில் படுத்தபடி அவள் முகத்தைப் பார்ப்பது ரொம்ப சுவாரஸ்யமான அனுபவம். செதுக்கினாற்போன்ற அந்த மூக்கைத் தொட்டு மிருதுவான உதடுகளுக்கு விரைந்து மென்மையான கழுத்தில் விரல்கள் இறங்கி அந்த எடுப்பான மார் பகத்தில் பிரேக் போட்டு நிற்கையில்—

''ஏய், இது இந்தியா கேட். பலபேருக்குக் கண் உண்டு.''

அவள் அவன் விரல்களை அகற்றாமலே கறுவுவாள்.

''புருவுடைய கழுத்துத்தான் இத்தனை லாங்ப்டா இருக்கும்.''

''ஸ்டாப்இட், ஹரி!''

இதையெல்லாம் எப்படி மறப்பே நீ? இல்லே மறக்க முடியாது என்கிற பலவீனத்திலேதான் எதிரே வரப் பயப்படறியா?

மாயா இதை நான் உன்கிட்டேந்து நிச்சயம் எதிர்பார்க்கல்லே. இனிமே நான் அந்த மாதிரி சேஷ்டையெல்லாம் நிச்சயம் செய்ய மாட்டேன். அதுக்கெல்லாம் அந்த உணர்வுகளுக்கெல்லாம் ரொம்ப மேலே என் மனசு பறந்தாச்சு. எனக்கு உன்னுடைய தோழமை வேணும். இத்தனை நாளா நம்மிடையே இருந்த நெருக்கத்தின் காரணத்துக்காக! இரண்டு வருஷமா உனக்கு நான், எனக்கு நீன்னு மனசிலே பின்னியிருந்த அன்னியோன்னியத்துக்காக! நீ யாரை வேணும்னாலும் கல்யாணம் பண்ணிக்கோ! எனக்கு சிநேகிதன் என்கிற ஸ்தானத்தை மட்டும் கொடு! அதுவே உனக்குப் பாரமாகிப் போகுமா?

''மிஸ்டர் ஹரி! மிஸ்டர் ஹரி!''

அவன் திடுக்கிட்டுக் கண்ணைத் திறந்தான்.

''வலிக்கிறதா?'' இரவு நர்ஸ் ஷர்மிளா.

''எது?''

''உடம்பு?''

''பொறுக்க முடியாம இல்லே.''

அவள் எதுவும் சொல்லாமல் கைத் துண்டினால் முகத்தைத் துடைத்தாள்.

''தூக்கத்தில் அழுதீர்களா? கனாக் கண்டீர்களா?''

''இருக்கலாம்.''

அவள் வேறு ஒரு நர்ஸின் உதவியுடன் அவன் படுக்கையைச் சரி செய்தாள். வெந்நீரைக் கொடுத்து முகத்தைத் துடைத்தாள். சாந்தியின் கைகளுக்கு இருக்கும் மென்மை இவளுக்கு இல்லை.

''சாந்தி அதற்குள் போய்விட்டாளா?''

''அதற்குள்ளேயா? ஐந்தரை மணி ஆகிறது. அவள் வீடு போய்ச் சேர ஆறரை ஆகிவிடும். புருஷனிடம் நல்ல 'டோஸ்' ஆகப் போகிறது இன்னிக்குப் பாவம்.''

''அவளுக்குக் கல்யாணம் ஆகிவிட்டதா?''

''ஓ யெஸ். ஆகியிருக்கிறது, ஒரு மிருகத்துடன்!''

இரண்டு நர்ஸ்களும் ஒருத்தரை ஒருத்தர் பார்த்துச் சிரித்துக் கொண்டார்கள்.

''அவள் எப்படி அப்படிச் சிரிக்கிறாள் என்று ஆச்சரியமாக இருக்கிறது ஷர்மி!''

''நடிக்கிறாள்!''

இருவரும் வேறு கட்டிலுக்குப் பேசியபடியே நடந்தார்கள்.



## TWO MINUTE WARNING



## இரண்டு நிமிட எச்சரிக்கை!

அமெரிக்கா. லாஸ் ஏஞ்சலஸ் நகரம். விளையாட்டு அரங்கு. எங்கு திரும்பினாலும் ஜனசமுத்திரம். அமெரிக்க பாணி கால் பந்து விளையாட்டில் வெற்றிக் கோப்பையைப் பெற இரண்டு புகழ்பெற்ற அணிகள் மோதுகின்றன. ஆட்டத்தின் நேர்முக வர்ணனை தொலைக் காட்சியில் தொடர்கிறது. அரங்கின் உச்சி மாடியில், ஓர் உருவம் தொலை நோக்கியுடன் கூடிய துப்பாக்கியின் பாகங்களை இணைத்துச் சரி பார்க்கிறது. எதிர்பாராத விதமாகத் தொலைக் காட்சி காமிரா அவனைக் காட்டிக் கொடுத்து விடுகிறது. வன்முறைகள் மலிந்த இந்த சகாப்தத்தின் சின்னமாக விளங்கும் அவனுடைய நோக்கம் என்ன? குறிப்பிட்ட யாரையேனும் தீர்த்துக்கட்ட வந்திருக்கிறானா அல்லது மனம் போனபோக்கில் மக்களை சுட்டுத் தள்ளப் போகிறானா? கவர்னர் உள்ளிட்ட பல பிரமுகர்கள் அரங்கிலே இருக்கிறார்கள். ஜனாதிபதி வந்து கொண்டிருக்கிறார். இந்தச் சூழலில் போலீஸ் உயர் அதிகாரி செயல்பட ஆரம்பிக்கிறார். பொதுமக்கள் பீதியடையாவண்ணம் ரகசியமாகப் போலீஸ் படை கொலைகாரனை ஒழித்துக்கட்டத் தயாராகிறது. ஆட்டம் முடிவதற்குச் சில விநாடிகள் முன் தன் இலக்கை நோக்கிச் சுட்டுவிட்டு, கலையும் கூட்டத்தோடு கூட்டமாகக் கலந்து விடுவதுதான் கொலைகாரனின் திட்டம். ஆட்டம் முடிய இன்னும் இரண்டே நிமிடம் பாக்கி இருக்கிறது. போலீஸ்காரர் ஒருவரின் துப்பாக்கிக் குண்டு கொலைகாரனைத் தீண்டுகிறது. ஆனால் சாகடிக்கவில்லை. ஆத்திரமடைந்த அவன் துப்பாக்கியைக் கூட்டத்தின் பக்கம் திருப்பித் தொடர்ந்து சுட ஆரம்பிக்கிறான். மக்கள் பீதியுற்றுச் சிதறி ஓடுகின்றனர். குழப்பம், ஓலம், இவற்றுக்கு இடையே கொலைகாரன் சுட்டுத்தள்ளப்படுகிறான்.

இரண்டு நிமிட எச்சரிக்கை — இரண்டு மணி நேர திகில்!

—டி. எம். ஆர்.

---

அவர்கள் சொன்ன விஷயம் அவனுக்கு ஆச்சரியத்தை அளித்தது. சாந்தியின் பளிச் சென்ற சிரிப்பு, ஞாபகத்துக்கு வந்தது. ஜீவித்திருப்பதே சந்தோஷகரமான விஷயம் என்கிற சிரிப்பு. அவனுடைய சொந்த வாழ்க்கை மகிழ்ச்சியாக இல்லையா? நம்புவது கஷ்டமாக இருந்தது. மனத்தில் ஒரு விசனத்தை வைத்துக் கொண்டு எப்படி அப்படிச் சிரிக்க முடியும்?

''நடிக்கிறான்!''

அவனுடைய சிரிப்பு நடிப்பு என்றால் உலகத்தில் நிஜம் என்று ஒன்றுமே இல்லை என்று தோன்றிற்று.

அவன் கண்களைச் சுழற்றிப் பார்த்தான். சற்றுத் தொலைவில் இருந்த படுக்கையில் புதிதாக ஒருத்தன் படுத்திருந்தான். வாட்டசாட்டமாக, செக்கச் செவேல் என்று சினிமா கதாநாயகன் மாதிரி சின்ன வயசாகத் தெரிந்தான். கண்ணை மூடி நினைவற்ற நிலையில் படுத்திருக்கும் அவனைப் பார்க்கையில் பரிதாபமாக இருந்தது. ஊர்மிளா யாருக்கோ டெம்பரேச்சர் எடுக்க வந்தாள்.

''புதுசா யார் அந்த பேஷண்ட்? என்ன கம்ப்ளெய்ண்ட்?'' என்றான்.

''எலெக்ட்ரிக் ஷாக் அடிச்சு இடுப்புக்குக் கீழே பராலிஸிஸ் ஆகிவிட்டது பாவம்.''

அதாவது சுவாதீனமில்லை....

''சரியாகிவிடுவானா?''

அவள் உதட்டைப் பிதுக்கினாள். மனத்தின் மூலையில் லேசாக ஓர் அதிர்வு ஏற்பட்டது.

பார்வையைக் கட்டி நிறுத்துகிற மாதிரி அந்த நிறமும் உடற்கட்டும் இந்த மாதிரி ஒடிந்து படுக்கத்தானா? என்ன அக்கிரமம் இது? இதற்கெல்லாம் என்ன தாத்பர்யம்! நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவன் மாதிரி தெரிந்தான். அவனுடைய பெற்றோர்களுக்கு எப்படி இருக்கும்? அவனுடைய காதலி எப்படி....

அவனுடைய கவனம் கலைந்தது. மாயா அவனை நோக்கி வந்து கொண்டிருந்தாள். அவளைக் கண்டதும் இதயம் வேகமாக அடித்துக்கொண்டது. கூடவே இவள் எதற்கு வருகிறாள் என்று அவனுள் எழும் கேள்வியைக் கண்டு அவன் திகைத்தான். (தொடரும்)

# போர்ஹென்ஸ்–பல் டாக்டரால் உருவாக்கப்பட்ட டூத்பேஸ்ட்






## உங்கள் பற்களை சுத்தம் செய்யும் போதே ஈறுகளையும் வலுப்படுத்த உதவுகிறது

251 F-203 TAM

**ஈறு உபாதையால் ஆரோக்கியமான பற்களைக்கூட இழக்க நேரிடும்**



பல் டாக்டர்கள் கூறுகிறார்கள், உங்கள் பற்களை சரிவர சுத்தம் செய்யவில்லையெனில் பற்களையும் ஈறுகளையும் சுற்றி, மெல்லிய கிருமிகளின் படிவமாகிய ஊத்தை (Plaque) தோன்றுகிறது. இதுவே நாளடைவில் பற்காரையாக மாறி, ஈறுகளை பலவீனப்படுத்தி, அவற்றைத் தள்ளுவதால் ஆரோக்கியமான பற்களும் விழுந்து விடக்கூடும். ஈறுகெட்டால் உடல் நலமே கெடும்.




**ஈறுகளுக்கு போர்ஹென்ஸ் பாதுகாப்பு**



டாக்டர் போர்ஹென்ஸினுடைய ஃபார்முலாவின் விசேட (அஸ்ட்ரிஞ்ஜண்ட்) சேர்க்கைப் பொருள் உங்கள் ஈறுகளை வலுப் படுத்தி ஈறு உபாதைகளைத் தடுக்க உதவுகிறது. ஆகவே, போர்ஹென்ஸ் டூத் பேஸ்ட், போர்ஹென்ஸ் டபிள் ஆக்ஷன் டூத்பிரஷ் கொண்டு பற்களைத் துலக்குங்கள். ஈறுகளைத் தேய்த்துக் கொடுங்கள்.

**போர்ஹென்ஸ்** —ஈறுகளுக்கெனவே

Regd. T.M. Geoffrey Manners & Co. Ltd.

# தெரியுமா, 'குர்பானி' தட்டு?




● சென்னை வாஹெளி நிலையத்தில் குளிர் நீர் அமைப்பு அருகே ஒரு டம்ளர் வைக்கக் கூடாதா என்றும், பின்பு குடிநீர் அமைப்பையே பெயர்த்து எடுத்து விட்டார்கள் என்றும் சில இதழ்களுக்கு முன்பு குறைப்பட்டிருந்தோம். ஆனல் தற்பொழுது புதிதாகக் குளிர் நீர் அமைப்பும், அருகே ஒரு டம்ளரும் வைத்துள்ளார்கள். எனவே வாஹெளி நிலயத்தாரைப் பாராட்டுகிறோம்.

● அமைச்சர் குழந்தைவேலு அண்மையில் வெங்கடேஸ்வரா பல்கலைக் கழகத்தில் எம்.ஏ. தேர்வு எழுதினர்.

● இவ்வாண்டு எஸ். எஸ். எல். சி. தேர்வில் இரண்டாவது இடத்தைப் பெற்ற மாணவன் சகாய மில்டனுக்கு அ.இ.அ.தி.மு.க. ஆயிரம் ரூபாய் வழங்கியுள்ளது. தேர்வில் முதல் இடத்தைப் பெற்ற மாணவனுக்குக் கிடைக்காத பாராட்டும் பரிசும் இரண்டாவது இடத்தைப் பெற்ற மாணவனுக்குக் கிடைத்திருப்பதைத்தான் அதிர்ஷ்டம் என்று கூற வேண்டுமோ?

● புடவைகளுக்கு சினிமாப் பெயர்களைச் சூட்டி விற்பதைப் பார்த்துள்ளோம். இப்போது பாத்திரங்களுக்கும் சினிமாபெயர்களை சூட்டத் தொடங்கி விட்டனர். இந்த வரிசையில் முதல் வெளியீடு 'குர்பானி' என்ற பெயரில் வெளியாகியுள்ள ஒரு எவர்சில்வர் தட்டு.



● துண்டு போட்டு
பகடை ஆடி
பணத்தைச் சேர்த்து
மதுக்குக் கொடுத்து
வெறியில் திளைத்து
குடியைக் கெடுத்து
உயிரைக் கொடுக்கும்




வெறியர்கள் வீண்
கனைக் கூலிகள்

என்ற கவிதை கடந்த வாரம் சென்னை மின் வண்டியில் கையால் எழுதப்பட்டு ஒட்டப்பட்டிருந்தது. கவிதைக்குக் கீழே ஜா.நி.சா. என்றிருந்தது. அவ்வப்போது சிரமம் பாராமல் பொன் மொழிகளையும் தத்துவங்களையும் துண்டுத் தாள்களில் எழுதி மின் வண்டிகளில் மட்டும் ஒட்டுகிறார் இந்த 'ஜா.நி.சா.'

—யெம்ஜி

● சென்னை நகரத்து ஆட்டோ ஒன்றில் (டி.எம். க்யூ 1923) ''இலவசம் பிரசவத்துக்கு'' என்று எழுதியிருக்கிறது.

● வத்தலக் குண்டு பஸ் நிலையம் அருகே ஒரு ஜவுளிக் கடையின் பெயர் ''ஜவுளிக் கடல்.''

—யெஸ்பால்

**உளர்வம்பு—**



# வணக்கம், நான் சாந்தா!

ஆர். சூடாமணி

"அரை நாள் லீவு வேணும்."

''பெண் பார்க்க வராங்களா?''

சாந்தாவுக்குக் கன்னத்தில் அடி வாங்கினாற்போல் இருந்தது. ஏனென்றால் மானேஜரின் ஊகம் சரிதான்.

''ஆமாம் ஸார். ஆனா... ஆனா...''

பேச முடியவில்லை. உணர்ச்சிகள்தான் குமுறின.

''லீவு எடுத்துக்கிட்டுப் போங்க. பெஸ்ட் விஷஸ். இந்தத் தடவையாவது கல்யாணம் நிச்சயமாகட்டும்.''

மீண்டும் சாந்தா அடியுண்டாள். மானேஜர் குத்திக் காட்டும் நோக்கத்துடன் பேசவில்லை. யதார்த்தமாய், அவளை ஆசீர்வதிக்கும் ஒரு பெரியவர் என்ற முறையில்தான் பேசினார். எனினும் சாந்தா புண்பட்ட நெஞ்சோடுதான் பஸ் ஸ்டாண்டை அடைந்தாள். உண்மைதான், பிள்ளை வீட்டார், அவளைப் 'பெண் பார்க்க' வருவது இதுவரை பலமுறை நடந்துவிட்ட சடங்கு.

வீடு சேர்ந்ததும் நேரே தந்தையிடம் வந்து ''அப்பா இன்னிக்கு வரப்போறவங்களை வர வேணாம்னு சொல்லி அனுப்பிச்சிடுங்க'' என்றாள்.

''என்ன உளர்றே?'' என்றார் அப்பா. அம்மா திடுக்கிட்டு நோக்கியதிலும் அதே கேள்வி வெளிப்பட்டது.

''உளறல் ஒண்ணுமில்லே. இப்படிக் கண்டவனும் வந்து வந்து என்னைப் பார்த்துட்டுப் போறது எனக்குப் பிடிக்கல்லே. அவ்வளவுதான்.''

''இத்தனை காலமாயில்லாம இப்ப என்னடி புதுசு?''என்றாள் அம்மா.

''ரொம்பக் காலமா ஒரு தப்பைப் பண்ணினோம் என்கிறதுக்காக அதைத் திருத்திக்கணும்னு தோணறபோது திருத்திக்காம இருக்கணுமா?''

''இருத்திக் கணும்கிற மாதிரி இதில் தப்பு என்ன வந்தது?''

அவள் தாய் அவளைக் குழப்பத்துடன் பார்த்தாள். இன்று திடீரென்று சாந்தாவுக்கு என்ன வந்து விட்டது? கடந்த பத்தாண்டுகளாய் அவளைப் 'பெண் பார்க்க' வரன்கள் வரவில்லையா என்ன? அப்போதெல்லாம் இவ்வாறு அவள் ஆட்சேபிக்கவில்லையே?... இதுவரை யாருக்கும் அவள் உருவம் பிடிக்காமல் போனதில்லை. எல்லாம் பொருளாதாரப் பிரச்னைதான்.

''இப்படியெல்லாம்பேசாதேம்மா சாந்தா! இந்த வாட்டி எப்பாடு பட்டாவது இந்த வரனை முடிச்சுடலாம். கூடக் குறையச் செலவானாலும் கடன் வாங்கியாவது...''

''கடன் வாங்கியாவது எதுக்கும்மா கொடுக்கிறது? இந்தப் பழக்கங்கள் எதுவுமே எனக்குப் பிடிக்கல்லே. இனி நான் என்னை யாரும் பெண் பார்க்க வரவோ பணத்தைக் கொடுத்துக் கல்யாணத்தை விலைக்கு வாங்கவோ சம்மதிக்க மாட்டேன்.''

இத்தனை திடமாய்த் தன்னால் ஒரு முடிவெடுக்க முடியுமென்று அன்று காலைகூட அவள் நினைத்திருக்கவில்லை. ஆனால் சில ஆண்டுகளாகவே நெஞ்சில் கேள்விகள் எழுந்த வண்ணம் இருந்தன. கொடுக்கல்—வாங்கல் இல்லாத சமத்துவ அடிப்படையில் ஒரு பெண்ணுக்குக் கல்யாணம் நடக்க முடியாதா? அப்படி முடியாத அந்தக் கல்யாணம் எனக்கு வேண்டாம் என்று சொல்லக் கூடிய திண்மை ஒரு பெண்ணுக்கு இருக்கக்கூடாதா? பெண்ணின் நிலையைக் கொச்சைப்படுத்தும் மனப்பான்மையின் ஓர் அம்சம்தானே இந்தப் 'பெண் பார்க்கும்' சம்பிரதாயம்?

காலையில் எழுந்திருக்கும்போதே 'இன்று என்னைப் பார்க்க வருகிறார்கள்' என்ற நினைவின் கிளர்ச்சி. நேரம் செல்லச் செல்ல மனத்தில் பரபரப்பு, ஆவல், கவலை 'அவர்களுக்கு என்னைப் பிடிக்குமா? பிடிக்க வேண்டுமே, கடவுளே!' வீடு மணக்கச் சக்தியை மீறிய தரத்தில் ஸ்வீட், காரம், காப்பி. உடம்புக்கு வித்தியாசமாய் அலங்காரம். 'இத்



தச் சேலை எனக்கு நன்று யிருக்குமா? தலையை இப்படிச் சீவிக்கொள்வது என் முக அமைப்புக்கு எடுப்பாய் இருக்கிறதா? மெல்லக் கண் உயர்த்தி 'அவனை'ப் பார்த்து, அந்த முன் பின் தெரியாத 'அவனு'க்குத் தன்னைப் பிடிக்க வேண்டுமே என்று ஏங்கி, 'அவர்கள் கேட்பதை யெல்லாம் கடன் வாங்கியாவது செய்ய ஒப்புக் கொள்ள வேண்டுமே' என்று பெற்றோருக்கே துரோகம் நினைத்து, யாருக்கோ நமஸ்காரம் செய்து அவர்கள் பாடச் சொன்னால் பாடி, கேள்வி கேட்டால் பதில் சொல்லி, இன்னொருவர் முகக் குறிப்பில் தன் வாழ்வையே நிர்ணயிக்கும் தீர்ப்பை எதிர்நோக்கி...

இதுவா திருமணத்தின் அஸ்திவாரம்? மன — குணப் பரிச்சயங்களுக்கு இடமளிக்காத இது போன்ற சடங்கா உடைக்கக் கூடாத, வாழ்நாள் முழுவதற்குமான புனித பந்தம் என்று பிரமாதமாய்ச் சொல்லப்படும் ஓர் உறவுக்கு அஸ்திவாரம்? அதுவும் இப்போது அவள் சிறு பெண்ணல்ல. சம்பாதிக்கிற, அறிவு முதிர்ச்சி கொண்ட, முப்பது வயதுக்காரி. இன்னுமா அவள் வேஷம் போட்டுக் கொண்டு, அன்னியர்கள் முன் பயந்து நின்று, அவர்கள் அவளை மதிப்பிடும் நோக்கத்துடன் மேலும் கீழும் பார்க்கும் போது கவலையுடன் காத்திருந்து....சீ!

உள்ளத்தில் குமைந்து கொண்டிருந்த உணர்வுகளெல்லாம் மானேஜரின் அந்தப் ''பெண் பார்க்க வராங்களா?'' என்ற பேச்சுக்களில் குபீரென்று உகப்பப்பட்டுத் தன்மான ஆவேசத்துடன் ஒரு தீர்மானமாக உருப்பெற்றிருக்க வேண்டும்.

''அதெல்லாம் எனக்குத் தெரியாது சாந்தா. இப்போ திடீர்னு அவங்களை வரக் கூடாதுன்னு சொல்ல முடியாது. இந்த ஏற்பாடெல்லாம் செய்யறபோது சும்மாத் தானே இருந்தே? சம்மதமில்லேன்னு அப்பவே சொல்றதுக்கென்ன? காலையில்கூட அரை நாள் லீவு போட்டுட்டு வந்துடறேன்னு தானே சொல்லிட்டுப் போனே?''

''அது என் தப்பு. அதுக்காக உங்ககிட்ட மன்னிப்புக் கேட்டுக்கிறேன். ஆனா இப்போ தயவு செஞ்சு எனக்காக அவங்களை நிறுத்துங்கப்பா! ப்ளீஸ்!''

''உன்கூடப் பேச நான் தயாராயில்லே. உள்ளே போய்க் காப்பி குடிச்சுட்டு அழகாட்ரெஸ் செய்துகிட்டுப் பின்னே வீட்டுக்காரங்க வரப்போ ரெடியா இரு.''

ஆறுமணிக்கு ஐந்து நிமிடங்கள் இருக்கும் போது ''அவர்கள்'' வந்தார்கள். அப்பாவும் அம்மாவும் வரவேற்க வாசலுக்கு ஓடினார்கள். சாந்தாவின் தங்கைகள் வழக்கம் போல் பின்கட்டுக்குப் போய்விட்டார்கள். சாந்தாவைப் பெண் பார்க்க யாராவது வந்தால் அவர்கள் அப்படிப் போய்விட வேண்டுமென்பது அம்மா கட்டளை.

''இதோ இப்படி உட்காருங்கள், இந்த நாற்காலி சௌகரியமாய் இருக்கும். லாருக்கு அங்கே காத்து வருதா? ஃபானை இன்னும் வேகமாய் விடலாமா? இந்தப் பக்க



மெல்லாம் அடிக்கடி கரெண்ட் கட் ஆயிடுது. இப்போ ஆகாம இருக்கணும்.''

''அப்போ பெண்ணை வரச்சொல்லலாமே'' என்றார் பிள்ளையின் தகப்பனார்.

''ஓ யெஸ். தேவானை நீ போய்ச் சாந்தாவை அழைச்சிட்டு வரியா? அப்படியே டிபனைக் கூடக் கொண்டுவந்துடலாம்.''

சாந்தாவின் தாய் உள்ளே போகத் திரும்பினாள். அவள் உள்ளேபோக அவசியம் நேரவில்லை. சாந்தாவே கைகளில் ஒரு ட்ரேயில் சிற்றுண்டித் தட்டுக்களுடன் அறைக்குள் வந்துகொண்டிருந்தாள்.

''விஸிட்டர்ஸ் வந்து கொஞ்ச நேரமாகுதே, டிபன் கொண்டு வரலாம்னு நினைச்சுத்தாம்ப்பா கொண்டு வந்தேன்'' என்று சாந்தா ட்ரேயை அங்கிருந்த ஒரு மேஜை மேல் வைத்தாள். பிறகு தலை நிமிர்ந்து நின்று,வந்தவர்களைப் புன்னகையோடு பார்த்துக் கரம் குவித்தாள்.

''வணக்கம். நான் தான் சாந்தா. இந்த வீட்டுக்காரரோட மூத்தமகள். நீங்க தானே பி.டபிள்யூ.டி. என்ஜினியர் மிஸ்டர் கார்த்திகேயனும் அவர் மனைவியும் மகனும்? நீங்க வரப் போறதாய் அப்பா சொல்லியிருந்தார். உங்களைச் சந்திச்சதில் ரொம்பச் சந்தோஷம்'' என்று கூறிவிட்டுச் சாந்தா அவர்களுக்கு எதிரே நாற்காலியில் உட்கார்ந்தாள்.

அவள் பெற்றோருக்கு அதிக அதிர்ச்சியா அல்லது கார்த்திகேயன் தம்பதிக்கா என்று சொல்ல முடியாமல், எல்லோரும் அவளை வெறித்தார்கள்.

''உங்க பேர் தனபால்னு அப்பா சொன்ன தாய் நினைக்கிறேன். அது சரிதானே?'' என்றாள் சாந்தா வரனிடம். அவன் பேச முடியாமல் மலைத்து உட்கார்ந்திருந்தான்.

''ஏ.ஜி. ஆபீசில் வேலை பார்க்கிறீர்களாம். நான் ராஜன் என்டர்ப்ரைஸஸ்ல ஸ்டெனோவாக இருக்கேன்.''

அறை மிகவும் நிசப்தமாக இருந்தது.

''டிபன் எடுத்துக்குங்க. சாப்ட்டுக்கிட்டே பேசலாம்'' சாந்தா டிரே மீதிருந்த சிற்றுண்டித் தட்டுக்களை எடுத்து விருந்தாளிகள் முன் வைத்தாள். தாயின் பக்கம் பார்வை சென்றது. ''அம்மா, ஏம்மா அப்படி நெளியறே? மறுபடியும் முதுகை நோகுதா?'' சாந்தா வந்திருந்தவர்களைப் பார்த்தாள். ''எங்கமாவுக்கு ரெண்டு மூணு நாளா லேசாய் முதுகு வலி. வேலைப் பளுதான். இன்னிக்குத்தான் கொஞ்சம் சுமாராச்சு. ஓய்வு எடுத்துக்கச் சொன்னேன், காலைல ஆபீஸ் போறபோதே. உடம்பைக் கஷ்டப் படுத்திக்கிட்டு உங்களுக்காக இத்தனை நிறுக பலகாரம் செஞ்சிருக்காங்க. பாருங்களேன். எதுக்கு இந்தச் சம்பிரதாயமெல்லாம்? வர வங்க பலகாரமா கேக்கறாங்க? இப்ப பாருங்க. முதுகு நோவு திரும்பியும் அதிகமாயிடுச்சு.'' மீண்டும் தாயைப் பார்த்தாள்.

''சீ,சீ, உளறாதே''என்றாள் அவள் தாய் பதற்றத்துடன்.

''இதில் என்னம்மா தப்பு? ரொம்பத் தெரிஞ்ச முறையில வந்திருக்காங்க.உன் உடம்புக்காகலேன்னு சொன்னா தப்பாகவா நினைக்கப் போறாங்க?''

''எனக்கு ஒரு உடம்புமில்லே. நீ... நீ... முதல்லே அவங்களுக்கெல்லாம் நமஸ்காரம் பண்ணு சாந்தா.''

''நான்தான் அப்பவே கை குவிச்சு வணக்கம் சொன்னேனே? ஆனா பதிலுக்கு யாரும் எனக்கு வணக்கம் செய்யலே. நம்ம சமூகத்தில் மரியாதைப் பண்புகளுக்கு என்ன ஆயிட்டு வருதுன்னு புரியலே.''

வந்தவர்களின் முகங்கள் சிவந்தன. அவள் பெற்றோர்கள் அரண்டு போனார்கள்.

''எல்லாரும்டிபன் சாப்பிட்டுக்கிட்டிருங்க, நான் போய்க் காப்பி எடுத்து வரேன்.''

காலிடிரேயை எடுத்துக் கொண்டுசாந்தா எழுந்து போனாள். கார்த்திகேயன் தம்பதி ஏதோ மந்திரக் கட்டிலிருந்து விடுபட்டவர்கள் போல் அவள் பெற்றோரை விழித்துப் பார்த்தார்கள்.

''என்னய்யா இது? உங்க மகளுக்கு மூளை கீளை சரியில்லையா? எங்களை அவமானப் படுத்தவா இங்கே வரவழைச்சீங்க?'' என்று கார்த்திகேயன் இரைந்தார்.

''ஸார், தயவு செய்து மன்னிக்கணும். எங்களுக்கே ஒண்ணும் புரியல்லே. எங்க சாந்தாவுக்கு இன்னிக்குத் திடீர்னு என்னமோ ஆயிருக்குது. உடம்பு சரியில்லையோ என்னமோ. எப்பவும் அவ இப்படி நடந்துக்கிட்டதே இல்லே....''

''அவளுக்கு உடம்பு சரியில்லேன்னா அதுக்காக எங்களை இன்ஸல்ட் பண்றதா? இப்படிப் பட்ட இடத்தில் சம்பந்தம் பண்ணணும்னு எங்களுக்குத் தலையெழுத்தா என்ன?''

''ஸார், ஸார், பெரிய மனசு பண்ணி நீங்க எங்களை மன்னிக்கணும். என் மகள் சார்பில் நான் மன்னிப்புக் கேட்டுக்கிறேன். அவளுக்குப் புத்தி சொல்றேன். நீங்க தயவு செஞ்சு இந்தக் கல்யாணப் பேச்சை முறிச்சிடாதீங்க....''

சாந்தா அறைக்குள் நுழைந்தாள். அவள் கைகளில் காப்பி இருந்தது. அவளைத் தொடர்ந்து வந்த இரு பெண்களில் ஒவ்வொருத்தியும் இரண்டு தம்ளர் காப்பி கொண்டு வந்திருந்தாள்.

''இதோ இவங்க ரெண்டு பேரும் என் தங்கைங்க ஸார். அம்மா, நம்ம எல்லோருக்

மனைவி: ஒவ்வொரு நாளும் உங்கள் கைக்குட்டையை ஆபீசிலே மறந்து போய் வச்சுட்டு வந்துடறீங்களே; ஏன்?

கணவன்: மறுநாள் ஆபீஸ் போறதுக்கு அந்த ஒரு காரணமாவது இருக்கட்டுமே என்றுதான்!

- பெ. கலாசாமி




"எனது கூந்தல்
அடர்த்தியாகவும் பட்டுப்
போல் மிருதுவாகவும்
வளரக் காரணம்"
V.V.D
தேங்காய்
எண்ணெய்
உங்கள் தேவைக்கேற்றபடி
பலவித பாக்கிங்குகளில்
கிடைக்கின்றது.
V. V. தனுஷ்கோடி நாடார் & சன்ஸ்
தூத்துக்குடி-628 001
V.V.D
COCONUT OIL
EP-VVD-1005

உங்களைப்
போன்றவர்களை திருப்தி
செய்ய சார்மினரால்தான்
முடியும்




சற்றே இளைப்பாற! சார்மினருக்கு இணையுண்டோ

**1 ரூபாய்க்கு 10*** * அதிகபட்ச விலை. தலவரிகளைப் பொறுத்தது.

சட்டபூர்வமான எச்சரிக்கை: **சிகரெட் குடித்தல் உடல் நலத்திற்குத் தீங்கானது**

STATUTORY WARNING **CIGARETTE SMOKING IS INJURIOUS TO HEALTH** CASVS-238-203 TAM

பிரதான டீலர்: மெஸர்ஸ் A. ஆறுமுக முதலியார் ஏஜென்சீஸ், திருவண்ணாமலை-606 601 (வ. ஆ.)



''உள்ளே ஏதோ சிரிப்பொலியும், அழுகையுமா அமர்க்களப் படுகிறதே என்ன மாமி?''

''ஒண்ணுமில்லே, புதிதாக வந்திருக்கும் மருமகளே, மற்றப் பெரிய மருமகள்கள் 'ராகிங்' செய்யறுங்க, அவ்வளவுதான்!''

– ஏ. வி. தேவன்

ருமே காப்பி கொண்டு வந்திருக்கேன். என்று சாந்தா வந்திருப்பவர்களைப் பார்த்தாள். ''இது ஒரு நட்புமுறையிலான விஸிட்தான். நீங்க எங்க வீட்டுக்கு ஒரு 'ஸோஷல் கால்' பண்ணி யிருக்கீங்கன்னுதான், நான் வச்சுக்கப் போறேனே தவிர என்னைப் பெண் பார்க்க நீங்க வந்திருப்பதா வச்சுக்கப் போறதில்லே. ரெண்டு தரப்புகள் சிநேக மாகிறதுக்கு ஏதோ ஒரு சந்தர்ப்பம் அமையணும். இல்லையா? இந்தப் 'பெண் பார்க்கிற பேச்சு' என் வரைக்கும் அப்படி நம்ம ரெண்டு குடும்பங்களும் அறிமுகமாகிறதுக்கு ஒரு வியாஜம் மட்டும்தான். இது ஒரு ஸோஷல் வருகையானதாலே எல்லாரும் ஒண்ணாய் உட்கார்ந்து காப்பி குடிக்கலாம்னு நினைக்கிறேன்.'' அவள் மூன்று விருந்தினர் முன்பும் தன் பெற்றோர் முன்பும் ஆளுக்கொரு காப்பித் தம்ளரை வைத்தாள். உடன் பிறந்தவர்களுக்கு ஒவ்வொன்று கொடுத்து விட்டுத் தானும் எடுத்துக் கொண்டாள்.

ஆத்திர மிகுதியால் கார்த்திகேயனுக்குப் பேச்சு வர சிறிது நேரமாயிற்று. ''என்ன சொன்னே? இது... இது 'ஸோஷல் காலா?''

''ஆமாம்.''

''பெண் பார்க்கிற சடங்கு இல்லையா?''

''இல்லே.''

தன்னைச் சுட்டெரிக்கும் அத்தனை பார்வைகளையும் சாந்தா நிதானமாய்ப் பார்வையிட்டாள். பார்த்துக்கொண்டிருக்கையிலேயே அவன், கண் முன் ஒரு வித்தியாசம் உருவாவது தெரிந்தது. தனபாலின் பிரமித்த பார்வை மெல்லத் தளர்ந்து கொண்டிருந்தது. இழையாய் ஒரு புன்னகை அவன் முகத்தில் வெளிப்பட்டது.

''என் தங்கைகளில் இவ பெரியவ. பேரு வீணு. இவளும் ஒரு கம்பெனியிலே வேலே பார்க்கரு. அவ சின்னவ. ஸரிதா.''

தனபால் மரியாதைப் பாங்குடன் எழுந்து நின்று அந்தப் பெண்களை நோக்கிக் கரம் குவித்தான். ''வணக்கம்.'' பிறகு சாந்தாவை நோக்கினுன். ''உங்களுக்கும் வணக்கம் சொல்றேன் மிஸ் சாந்தா.''

''வணக்கம்.'' அவளும் புன்னகையோடு கரம் குவித்தாள். ''எல்லோரும் உட்காரலாமா? வீணு, ஸரிதா, நீங்களும் உட்காருங்க.''

''நீங்களே உட்காருங்க. நாங்க போறேம். இனிமே எங்களுக்கு இங்கே என்ன வேலே?'' என்று கார்த்திகேயன் எழுந்தார்.

''பாவிப் பொண்ணே என்ன காரியம் செஞ்சிட்டேடி?'' என்று சாந்தாவின் தாய் ஓலமிட்டுக் கொண்டே ''பெண் பார்க்க யாரும் வரக் கூடாதுன்னு அப்புறம் உனக்குக் கல்யாணம் எப்படி ஆகும்?'' என்றுள்.

''ஆகாமல் போனுல் நான் செத்துடமாட்டேம்மா'' என்ற சாந்தா காப்பியை ஒரு வாய் பருகினுள்.

''உங்களுக்கெல்லாம் சர்க்கரை சரியா இருக்கா?''

''ஓ, சரியா இருக்கே! காப்பி ரொம்ப நல்லா இருக்கு மிஸ் சாந்தா, தாங்க்ஸ்'' என்றுன் தனபால்.

''அப்புறம் தறுதலையாய்த் தானே மாப்பிள்ளை தேடிக்கச் சொல்லும்'' என்று சாந்தாவின் தாய் தொடர்ந்து ஓலமிட்டாள்.

சாந்தா புன்னகை செய்தாள். ''மிஸ்டர் தனபால்! ஒண்ணு கவனிச்சிங்களா? நம்ம சமூகத்தில் ஒருத்தர் தானே புருஷனேயோ மனைவியையோ தேடிக்கிறதை என்னமோ பெரிய தப்பு மாதிரியும் தான்தோன்றித் தனம் மாதிரியும் நினைக்கிறுங்க. உங்க அபிப்பிராயம் என்ன?''

''நான் அப்படி நினைக்கல்லே. தங்கள் வாழ்க்கையைத் தாங்களே நிர்ணயிக்கக்கூடிய மனப் பக்குவமும் பொறுப்பும் உள்ளவங்களுடைய செயலாய்த்தான் நான் அதை நினைக்கிறேன். என்று நானே என் ஆபீசில் வேலே பார்க்கிற ஒரு பெண்ணைக் காதல் கல்யாணம்தான் செஞ்சுக்கப் போறேன்'' என்றுன் தனபால்.

''என் வாழ்த்துக்கள்'' என்றுள் சாந்தா.

''என்னடா இது தனபால்?'' அவன் தந்தை கோபமாய்க் கூவினுர்.

''மன்னிச்சுக்குங்கப்பா. எனக்கு அந்த எண்ணம் ரொம்ப நாளாய் உண்டு. ஆனுல் உங்ககிட்டேயும் அம்மா கிட்டயும் சொல்லப் பயமா யிருந்தது. அதைத் தவிர, சம்பிரதாயத்தை மீறத் தைரியமும் போதலே. இங்கே பெண் பார்க்க வரணும்னு நீங்க சொன்னப்பக்கூட மாட்டேன்னு சொல்ற தைரியமில்லாமத்தான் வந்தேன். ஆனு இப்போ...'' அவன் கண்கள் சாந்தாவின் மேல் மதிப்புடன் பதிந்தன.

''இப்போ இங்கே நடந்ததைப் பார்த்தப்புறம் மனசுக்குச் சரின்னுதோணற விதமாய் நடந்துக்கற தைரியம் வந்துடிச்சு.''

''சீ! பிள்ளையா நீ? தறுதலே!'' கார்த்திகேயன் வேகமாய் வெளியேறினுர்.

தனபால் மீண்டும் கைகுவித்தான். ''நான் போய் வரேன் மிஸ் சாந்தா. உங்களுக்கு ரொம்ப நன்றி.''

சாந்தா தலைநிமிர்ந்த கம்பீரத்துடன் ''யூ ஆர் வெல்கம்'' என்றுள்.

# நீயே ஒரு புதுக் கவிதை!

அந்தரத்திலே நின்று
அற்புதங்கள் செய்வதெல்லாம்
மந்திரத்தாலா?
மயங்குகின்றோம்.
மகளே!
அகலக்கால் வைத்து
அளக்கப்படுவது
இந்திய — சோவியத் நட்புறவா?
நல்லது
நீயொரு
சோவியத் ஸ்வர்ணமுகி!

- பி. வி. கிரி



புகுந்த இடம் விட்டாலும்
பிறந்த இடம் மறுத்தாலும்
இறங்க இடம் இல்லையென்று
இருக்கின்றாய் அந்தரத்தில்!
''Y யாரக்'' காட்சியென
உன்னையும் படமாக்கி
அந்தரத்தில் ஆடவிட்டு
ஆனந்தப்படுவதுமேன்?

- ஆர். பி. சாரதி

வானில்
மேலே பறந்தது ஸ்புட்னிக்
இங்கே
கீழே பறப்பது மிஸ்னிக்.
ஹம்பக் அல்ல, ஸ்புட்னிக்
மேஜிக் அல்ல மிஸ்னிக்
இரண்டுமே நல்ல ருஷ்ய மேக்.
இதோ ஒரு பாராட்டு கேக்.

- கலைமணி பத்மா



வானிலே எம்பிக் குதித்து
அந்தரத்தில் நிற்பதென்ன
அரும்பெரும் சாதனையா?
எங்கள் ஊர் விலைவாசிகள் இதைவிட
உயர உயர
எகிறுமே!
எங்களின் அரசியல்வாதிகள்
மட்டுமென்ன, சளைத்தவர்களா?
அவர்கள் அடித்திடும்
ல்
ப டி முன்
உங்களின் 'ஜிம்னாஸ்டிக்ஸ்'
தலைகுனிய வேண்டுமம்மா! -பாரத்வாஜன்

எட்டாத உயரத்தில்
எக்களிக்கும் வரதட்சணையை
எட்டிப் பிடித்து
கலியாணச் சந்தையிலோர்
கணவனை விலைபேச
இந்நாட்டுக் கன்னியர்க்கு
விண்ணில் பறக்கும் வித்தையை
அல்லாமிஸ்னிக் நீ கற்றுக்கொடு;
புண்ணியம் ஆயிரம் உனக்குண்டு!

- திருமதி பாத்திமுத்துசித்தீக்

அந்தரத்தில் மிதக்கும்
'மன்ஏஜ்' பறவையே!
நீயே ஒரு புதுக் கவிதை!
உன்னைப் பற்றி ஒரு புதுக் கவிதையா?
ஆனால்
உன்னை நான் நேசிக்கவில்லை!
வினாடி நேரம்
உன்னில்
விளங்கிய அழகை
வெளிப்படுத்திய — நிலைப்படுத்திய
அந்த
காமிராவைத்தான்
நான் காதலிக்கிறேன்!

- மதிவண்ணன்




"இது ஒரு 'AWARD' பிலிம். தியேட்டரில் கூட்டமே இல்லே. A எழுத்தைத் தவிர மற்ற எழுத்துக்களை அழித்து விட்டுத் திரையிட்டோம். படம் 'ஹவுஸ்புல்' ஆக ஓடுகிறது!"



# A ஜோக்ஸ்! —JONES



"இது ஒரு 'A' தியேட்டர். A படங்கள் மட்டுமே இங்கு திரையிடுகிறார்கள்!"




"இப்பொழுது சினிமா ரசிகர்களுக்கு வேண்டியதெல்லாம் இந்த A அடையாளம்தான். அதனால் விளம்பரச் செலவும் குறைவு!"

"நான் பிறவியிலேயே ஒரு 'A' நடிகையாக்கும்! என்னுடைய ரத்தம்கூட 'A' குரூப் ரத்தமாகும்."







''மெதுவாகப்பேசு! நாம் பார்க்கப்போவது 'A' படம். குழந்தைகளும் படம் பார்க்க வருவோம்னு பிடிவாதம் பிடிக்கும்.''

''அவர்கள் பார்த்துவிட்டு வந்து கதையைச் சொன்னபிறகுதானே எனக்குப் படம் பார்க்க வேண்டும் என்ற ஆசையே வந்தது!''












# சந்திரநாத்



# நீயார்?

## 10

''மிஸ்டர், உங்கள் பெயர்?'' — ஒரு போலீஸ் குரலின் அதட்டலைக் கேட்டு, மகேஷ் இந்த உலகத்துக்குத் திரும்பி வந்தான்.

எதிரே காக்கிச் சட்டைகளும்பெல்டுகளும்தெரிந்தன.

''மகேஷ்'' என்றான்.

''ஏதோ சாமியார், சந்நியாசி மாதிரி இருக்கிறதே — ரிஷிகேஷா — ஹிஞ்சின்ஜங் காவா?''

''மன்னிக்கவும். நான் குடும்பஸ்தன்'' என்றான் உஷ்ணமாக.

''தொழில்?''

''பிஸினஸ்.''

''எங்கே?''

''மெட்ராஸில்.''

''என்ன பிஸினஸ்?''

''பிரைவேட் - ஐ.''

''ஓ!'' என்றார் இன்ஸ்பெக்டர். பிரைவேட் 'ஐ'களை அவருக்குப் பிடிக்காது. பிரைவேட் ஐக்களுக்கு இன்ஸ்பெக்டர்களைப் பிடிக்காது. முகத்தைச் சுளித்தார்.

''ஹோட்டல் நிர்மலாவில் என்ன பண்ணிக் கொண்டிருந்தீர்கள்?''

''என் கிளையண்ட் ஒருவரைப் பாதுகாத்துக் கொண்டிருந்தேன்.''

''கிளையண்டின் பெயர்?''

''கமல்நாத்.''

இன்ஸ்பெக்டர் வாருவதற்குச் சரியான வாய்ப்புக் கிடைத்ததில் உற்சாகமடைந்தார். சிரித்தார். ''நீ பாதுகாத்த லட்சணம்தெரியுதா? உன் ஆசாமி குளோஸ். அவரைக் கத்தியால் குத்திப் படுக்கையிலேயே எரிய விட்டிருக்காங்க. நீ சுகமாக அடுத்த அறையிலே தூங்கியிருக்கிறே!''

''ஓ, மை காட்!'' — தலை சுற்றியது மகேஷுக்கு.

''அவருக்கு என்ன தொழில்?''

''பிலிம் டிஸ்ட்ரிபியூட்டர்.''

''விரோதிகள் உண்டா?''

''தெரியாது.''

''ஏன் இந்த மதுரைக்கு வந்தார்?''

''என்னிடம் சொல்லவில்லை.''

''பின்னே ஏன் ஐயா உன்னைக் கூட்டிக்கிட்டு வந்தார்?''

''துணைக்கு.''

இன்ஸ்பெக்டர் அவநம்பிக்கையுடன் பார்த்தார். ''நீயேதான் கொலை செய்திருப்பாயோ?'' என்று பார்வை கேட்டது.

''317. இந்த ஆளைப் பிடிக்க இரண்டு நாளைக்கு உள்ளே போடு' என்று சொல்ல நினைத்து, ஏதோ நினைவு வந்து நிறுத்திக் கொண்டு, ''உன்னை எப்படி 'ஐடென்டிஃபை' பண்றது?'' என்று தணிந்தார்.

மகேஷ் உள் சட்டைப் பையிலிருந்து அத்தாட்சிப் பத்திரத்தை எடுத்துக் காட்டினான்.

''அடுத்து என்ன செய்யப் போறே?''

''கொலைகாரனைக் கண்டு பிடிக்கணும்.''

''கண்டு பிடிக்கறுவாயா? முடியுமா?'' — ஏகத்தாளமாகக் கேட்டார்.

''உங்களாலே முடிஞ்சா நீங்களும் கண்டு பிடிக்கலாம்.'' — அந்த 'முடிஞ்சா'லே இன்னொரு ஏகத்தாளத்தைத் தோய்த்துத் திருப்பி எறிந்தான். எந்தக் கொலைக் கேஸில் எந்தக் குற்றவாளியை நீங்க கண்டு பிடிச்சிருக்கீங்க? என்ற குத்தல் அதில் தொனித்தது.

''அதென்னய்யா — முடிஞ்சா? — கண்டு பிடிக்கத்தான் போறோம்.''

''செய்யுங்க. — நான் போகலாமா?''

''மதராசுக்கா?''

''மதராஸுக்குக் குற்றவாளியோடுதான் போவேன். மிஸ்டர் இன்ஸ்பெக்டர், இப்ப என் விசாரணையை ஆரம்பிக்கப் போறேன்.''

''நாங்களும் உங்களை மேலே விசாரிக்க வேண்டியிருக்கும். இன்னும் இரண்டு நாள் மதுரையை விட்டு நீங்க போகக் கூடாது.''

''ஹோட்டல் நிர்மலாவிலேயே இருப்பேன். ஆல்வேஸ் வெல்கம்.'' எழுந்து வெளியில் ஓடம் களைந்து வந்தான். வராந்தாவில் புகை இன்னமும் இருந்தது. அறையில் தீயை அணைத்து விட்டார்கள். உடம்பின் எஞ்சிய சின்னங்களை எடுத்துப் போய்விட்டிருந்தார்கள்.

'சீ! என்ன லட்சணமாக நான் பாதுகாப்பு வேலை செஞ்சிருக்கிறேன்?' — வெறுத்தான். 'என் கிளையண்டை நான் அறியாமலேயே கொன்று — பிறகு நான் எதற்காக ம்—?' விக்கித்தான். எதிரி ஜெயித்து விட்டான். சந்தேகமே இல்லை.

கோயிலோரமாக நடந்தான். கமலே நினைவில் மிதந்தார். 'மகேஷ், என்னைக் கை விட்டுட்டியே' — கதறினார்.

''விடமாட்டேன். உன்னைக் கொன்ற மிருகத்தைக் கண்டு பிடித்தே தீருவேன்.''—உறுமிக்கொண்டான்.

எதிரே ஒரு 'கூல்' பார் இருந்தது. உள்ளே நுழைந்து ஒரு பானத்தைத் தருவித்துக் கொண்டு உறிஞ்சியபடியே நெடு நேரம் நின்றிருந்தான்.

கேள்விகள் வளையங்களாகச் சுழன்றன.

(அ) இந்தக் கமல்நாத் யார்? ஒரிஜினல் பிஸினஸ் ஆன்தானா? எந்த ஊர்? பூர்வோத்ரம் என்ன?

விசாரித்தானா? விசாரிக்கவில்லை. எவ்வளவு பெரிய தவறு!

அடுத்ததாக, ''வெறும் பாடிகார்ட்'' வேலைதானே என்று அலட்சியமாக இருந்தான். அதுவும் பெரிய பிசகில்லையா?

ஆனால் கமல்நாத் ஆபத்தை எதிர்பார்த்திருக்கிறார். அது வரும்போது உதவுவதற்காகத்தான் தன்னை அமர்த்திக்கொண்டார். இரவில் எல்லோரும் தூங்கிய பின் கூட ஆபத்து வரலாம் என்று அவன் ஏன் எதிர்பார்க்கவில்லை?

'கமல்ஜி! நீங்களாவது உங்கள் பய எதிர்பார்ப்புகள் பற்றி என்னை எச்சரித்திருக்கலாமே ஏன் செய்யவில்லை?'

பானம் வற்றிவிட்டதும் கீழே வைத்துவிட்டு வாசலுக்கு வந்து நின்றான். பார்க்கில் கடலை விற்றார்கள். ஒரு பெண் — பயமற்ற பார்வையுடன் பேரங்களை எதிர்பார்த்து நின்றாள்.

படுக்கையில் எரியும் கமலை சூன்யத்தில் பார்த்துக் கொண்டு மகேஷ் நின்றான். கேள்விகள் மீண்டும் எழுந்தன.

(ஆ) கொலையாளி எப்போது வந்தான்? யார் அவனுக்குக் கதவைத் திறந்து விட்டார்கள்? கமலா?

(இ) ஏன் அவன் படுக்கையில் தீ வைத்தான்? கத்திக் குத்து ஒன்றே போதாதா? தீயை வேறு வைத்து ஏன் எல்லார் கவனத்தையும் கவர்ந்தான்?

தீ வைக்காமல் இருப்பதுதான் விடியும் வரை அந்தக் கொலையைப் பற்றி உலகம் அறியாதிருக்க உதவும் என்பதும் தீவைத்தால் உடனே அக்கம் பக்கத்தார்விழித்துக் கொண்டு ஓடிவந்துவிடுவார்கள் என்பதும் அவனுக்குத்தெரியாதா?




(ஈ) கொலையை மறைத்தும், கமல்நாத் தீ விபத்தில் இறந்தார் என்று 'எண்டா பினிஷ் பண்ண எண்ணினானா?

(உ) அப்படியானால் கத்தியை அப்படியே மார்பில் விட்டுச் சென்றிருக்க மாட்டானே?

நாகப்பட்டினம் அல்வாக் கடையில் அல்வா தட்டைத் துடைத்துக் கொண்டிருந்தார்கள். கடந்து அப்பால் போய், ஒரு பெட்டிக் கடையில் ஒரு சிகரெட் வாங்கிப் பற்றவைத்துக் கொண்டான்.

வீதியெங்கும் பிரசித்தி பெற்ற மதுரை மல்லிகைகள், கடை கடையாய், தட்டுத் தட்டாய், குப்பலாய் மணத்தன. ஆனால் அவனுக்குக் கமல்நாத் தீயில் எரிந்து நாறுவது போலிருந்தது. வெறுப்பாக இருந்தது. பார்க்கவே பிடிக்கவில்லை, மதுரையை.

ஒருவேளை இது எல்லாமே முன்கூட்டியே திட்டமிட்டதாக இருக்குமோ? மூளையில் ஒரு புதிய ஒலி கேட்டது. ''கமல்நாத்தே ஏற்பாடு செய்ததாக இருக்குமோ''

தீயிலிருந்து கிடைத்த உடல்அடையாளம் தெரியாதவாறு கருகிக் கிடந்ததைக் கவனத்தில் எடுத்துக் கொண்டு பார்த்தால்—

இறந்தது கமல்நாத்தாக இல்லாமலும் இருக்கலாமே! ஓ. இறந்தவர்கமல்நாத் இல்லை. ஆனால் தான் இறந்துவிட்டதாக எல்லோருக்கும் தெரியப்படுத்த கமல் விரும்பியிருக்கிறார். இறந்தது கமல்தான் என்று சாட்சி சொல்லத்தான் அவனை அழைத்து வந்திருக்கிறார்.

—ஓ. கமல்தான் கொலைகாரன். அவர் தான் வேறு யாரையோ தருவித்துக் கொலை செய்து, தீயிட்டுப் போகக்கிவிட்டு, எங்கோ மறைந்து விட்டார் — ஏன் கூடாது?

மளமளவென்று நடந்து ஒரு மெடிகல் ஸ்டோரில் நுழைந்து, பெர்மிஷன் பெற்றுச் சென்னையைப் போனில் அழைத்தான்.

''நடேஷ் ஹியர்'' என்றது குரல்.

''நான் மகேஷ் பேசறேன்.''

''ஓ-மை டியர்! யங் பாய் ஹௌ ஆர் யூ?''

''வெல் நடேஷ்'' என்றான்.

''குட் நியூஸ் மை டியர் — நீலா வந்து விட்டாள்'' என்றான் நடேஷ்.

''வந்துவிட்டாளா? எப்போ, எப்படி?''

''நீ போன இரண்டாவது மணி நேரமே முனை முறியாமல் வந்து சேர்ந்து விட்டாள். ஒரு காயம்இல்லே.நான்தான்சொன்னேனே!''

''கடவுள் காப்பாற்றினார்.''

''நான்தான் சொன்னேனே — உன்னை மெட்ராசிலேயே மடக்கிப் போடத்தான் நீலாவைக் கடத்தி உனக்குப் பயம் காட்டியிருக்கிறார்கள். வடக்கத்திப் பொம்பளை, நரபலி எல்லாம் வெறும் கதை... டேப்.... அதையும் மீறிக் கிளம்பி விட்டாய் என்று தெரிந்ததும் அவளை ரிலீஸ் செய்து விட்டார்கள்.''

''கமல் வீட்டில் கொலை நடக்கப் போவதாக வந்த கால்?''

''தட் ஆல்ஸோ ஏ டேப். — கமலிடம் நீ நம்பிக்கை இழந்து அவன் கூட வர முடியாது என்று நீ மறுத்து விட வேண்டும் என்று விரும்பினார்கள்.''

''கொலை ஒன்றும் நடந்துவிட வில்லையே?''

''ஒரு கோழிக்குஞ்சு கூடச் சாகவில்லை.''

''ஆச்சரியம்தான்.''

''மனைவி என்று ஒருத்தி இருந்தால் அல்லவா கொலை செய்ய?''

''ரியலி?''

''கமல் கட்டைப் பிரம்மச்சாரி. நான் விசாரித்து விட்டேன்.''

''ஓ!''

''கமல் மதுரைக்குத் தனியாக வரவேண்டும் என்று யாரோ விரும்பினார்கள். கமலும் யாரையோ தனியாகச் சந்திக்க அஞ்சினார்.''

''அவர் அஞ்சியதில் அர்த்தம் இருக்கிறது நடேஷ்.''

''பையா — என்ன சொல்கிறாய்?''

''அந்தக் கமல்நாத் இங்கே இறந்து கிடக்கிறார் நடேஷ்.''

''வாட் — வாட்?'' — அதிர்ந்தான் நடேஷ். ''கொலையா?''

''கொலை என்றுதான் தோன்றுகிறது. கொன்று படுக்கையில் கொளுத்தியுமிருக்கிறார்கள். பாடி சுத்தமாகக் கருகிவிட்டது.— நான்கொஞ்சம் அயர்ந்துஇருந்துவிட்டேன்.''

''இடியட்!'' இரைந்தான் நடேஷ்.

''கோபிக்காதே நடேஷ். நடந்ததை முழுக்கக் கேள்.''—விவரமாகச் சொன்னான். கேட்டுவிட்டு, ''இப்போ எதற்குக் கூப்பிட்டாய்?'' என்றான் நடேஷ்.

''எனக்குக் கமல் பற்றிச் சில தகவல்கள் தெரிய வேண்டும்.''

''நீ கேட்பாய் என்று தெரியும். நேற்றே நிறைய விசாரித்து விட்டேன்.''

''கமலின் பூர்வோத்ரம் என்ன?''

''சொல்கிறேன். கமல் என்கிற இந்த ஆளைப் பற்றி இந்தப்பட்டணத்துக்கு மூன்று ஆண்டுகளாகத்தான் தெரியும். ஆள் பிரம்மச்சாரி. பெண் தொடர்பு இருப்பதாகத் துப்பு இல்லை. சமையற்காரன் இவனைத் தங்கம் என்கிறான். ஆனால் ஆசாமிக்கு இப்போ பணக் கஷ்டம் என்கிறார்கள். இரண்டு படம் டிஸ்டிரிபியூட் எடுத்துப் படு மோசமாக ஓடியிருக்கிறது.''

''மூன்று வருஷத்துக்கு முன் எங்கிருந்தான்?''

''தெரியாது.''

''அவனுக்கு எதிரிகள் யாராவது...?''

''மெட்ராஸில் நிச்சயம் இல்லை.''

மௌனம். ''எனி மோர் கொஸ்சென்ஸ்?''

''நோ...தாங்க்ஸ் — நானே பேசுகிறேன்.''

''இரு அப்பா — இன்னொரு முக்கியமான செய்தி இருக்கிறது.''

''என்ன?''

''நீயும் கமல்நாத்தும் இங்கிருந்து எத்தனாம் தேதி கிளம்பினீங்க?''

''ஜூன் 2ம் தேதி. அதாவது நேற்றுக் காலை.''

''அதே ஜூன் 2ந் தேதி காலை ஆறு மணிக்கு உன் ரயில் புறப்படுவதற்குப் பதினைந்து நிமிஷத்துக்கு முன்னால்எழும்பூர் ஸ்டேஷனிலிருந்து ஒரு பெண் ஒரு அபூர்வ தந்தி கொடுத்திருக்கிறாள் — மதுரைக்கு.''

''ஓ!'' — நிமிர்ந்து கூர்ந்து கேட்டான் மகேஷ்.

''தந்தியில் என்ன இருந்தது தெரியுமா? ''அக்பருக்கு டபிள் ஜே'' என்கிற ஒரே வார்த்தை—''

''வாட்... வாட்?''

''தந்தி குமாஸ்தாவுக்கே ஆச்சரியமாக இருந்ததாம். ஆனால் தந்தியையும் பணத்தையும் கொண்டு வந்தவன் ஒரு சின்னப் பையன். ரயிலடி பொறுக்கி... 'யாருடா இதைக் குடுத்தாங்க' என்று குமாஸ்தா கேட்டாராம். பையன், 'அதா, அந்த அம்மா'ன்னு காட்டினானாம். பழக் கடைகள் அருகில் ஒரு பெண்ணின் முதுகுதான் தெரிந்ததாம்.''

''தந்தியில் கொடுத்தவர் கையெழுத்து இருக்குமே?''

''இருந்தது — 'நூர்' என்று. விலாசம் ஏதோ கொடுத்திருந்தாள். அங்கே போய் விசாரித்ததில் அப்படி யாரும் இல்லை. அது ஒரு சிகரெட் ஸ்டால்.''

''ரொம்பஆச்சரியமாக இருக்கிறதுஇல்லே''

''ஆமாம். மதுரை தள்ளாகுளம் போஸ்ட் மாஸ்டரைப் போய்ப் பார். நிஷார் அகமது கேராஃப் போஸ்ட் மாஸ்டர் என்று யாராவது வந்து தந்தியை வாங்கிக் கொண்டு போயிருப்பார்கள். எக்ஸ்பிரஸ் தந்தி.''

''இதோ இப்போதே போறேன்.'' வேகமாகக் கிளம்பினான் மகேஷ். (தொடரும்)

---

''கணக்கு என்றால் காததூரம் ஓடுவானே நம்ம பிள்ளையாண்டான் இப்போ எப்படி சார்?''

''எவ்வளவோ தேவலே! பள்ளிக்கூட கேட்வரை தான் ஓடுகிறான்...!''

-பெ. கலாசாமி



# மின்னலடிக்கும் ஸூப்பர் ரின் வெண்மை...

**...இதர, டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதனையும் மிஞ்சும் வெண்மை.**

பார்வைக்கு தப்பவே தப்பாத வெண்மை உங்கள் துணிகளுக்கு—வேளை தவறாத ஸூப்பர் ரின் சலவையின் வெண்மையே தனி.
இதர டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதனையும் மிஞ்சுவது ஸூப்பர் ரின் வெண்மை.
காரணம், மிகுந்த வெளுக்கும் சக்தி அடங்கியது ஸூப்பர் ரின்.

**நீங்களே கண்டுகொள்வீர்கள்**

இதை வெளுத்தது வேறுசில டிட்டர்ஜெண்ட் பார்



இதை வெளுத்தது ஸூப்பர் ரின்




<u>அதிக</u>
வெளுப்பூட்டும் சக்தி படைத்தது
ஸூப்பர் ரின்.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

லின்டாஸ்-RIN.35-2012 TM

# சுட்டது

## உமா சந்திரன்

ஜகதாவுக்குச் சாப்பாடே பிடிக்கவில்லை. சுவாரஸ்யமே இல்லாமல் ஏனோ தானோ என்றுதான் சமையலை ஆக்கி வைத்திருந்தாள். ரசித்துச் சாப்பிடுவதற்குக் கணவரும் குழந்தைகளும் வீட்டில் இல்லாதபோது தனக்கு மட்டும் வக்கணையாகச் சமைத்துக் கொள்ள யாருக்குப் பிடிக்கும்?

லதாவும் கிரீஷும் விடுமுறையை முன்னிட்டு அவரவர் பள்ளிகளில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த பிக்னிக் பார்ட்டியிலும் கல்விச் சுற்றுலாக் கோஷ்டியிலும் கலந்துகொண்டு சென்றிருந்தனர். அவர்களுடைய அப்பாவும் ஆபீஸ் வேலையாக பம்பாய்க்குப் போயிருந்தார். இன்று முழுவதும் வீடு வெறிச்சென்றுதான் இருக்கப் போகிறது. நாளைக்குத்தான் வழக்கமான கலகலப்பை எதிர்பார்க்க முடியும்.

தனிமை பாரமாக இருந்தது. தனபாக்கியத்தைப் பிற்பகல் வேலைக்கு வரவேண்டியதில்லையென்று சொல்லாமலிருந்திருக்கலாமோ? அவள் வழக்கம்போல் இரண்டு மணிக்கு வந்தால் ஐந்து மணி வரை ஏதாவது வேலை கொடுத்துக் கொண்டிருக்கலாம். பேச்சுத் துணைக்குப் பேச்சுத் துணை. பொழுது போவது கஷ்டமாக இராது.

ஆனால் துலக்குவதற்குப் பற்றுப் பாத்திரங்கள்கூட ஒன்றிரண்டுக்கு மேல் இல்லை. அவளும் பாவம், தன் வீட்டில் குழந்தை குட்டிகளுடன் போராடிக் கொண்டு தானே வேலை தவறாமல் இங்கும் வந்து பாடுபடுகிறாள். அரை நாள் பொழுதாவது அவளுக்கு ஓய்வு இருக்கட்டுமே!

''தனபாக்கியம், மத்தியானம் உனக்கு லீவு. வீட்டில் நல்லா ஓய்வு எடுத்துக்கோ. ஏதாவது சினிமா பார்க்கறதானாலும் பார்த்துட்டு வா!''

''ஆமாம்! நான் சினிமா பார்த்து வாழ்ந்தேன்! அன்றாடப் பொழப்பே எனக்குச் சினிமாவாத்தானே இருக்கு!''

''ஏன், உன் புருஷன் சம்பாத்தியம்?''

''என்ன சம்பாத்தியம் போங்க. அவருக்குத் தெரிஞ்ச வேலை படத்துக்குக் கண்ணாடி போட்டுச் சட்டம் அடிக்கிறது ஒண்ணுதான். அன்றாடம் கடை கடையா அலைஞ்சுட்டுத்தான் வராரு. யாரு வேலை குடுக்கறாங்க! வாரத்திலே ஒரு நாள் ரெண்டு நாள் வேலை கெடைச்சாலே அதிர்ஷ்டம். அப்புறம் கூலிக்கு நடையா நடக்கணும்.''

ஜகதாவுக்குச் சங்கடமாயிருந்தது. ஏன் தனம்,



நம்ம வீட்டில ஒரு வேலே இருக்குன்னு சொன்னேனே! ஸ்வாமி படங்கள் நாலஞ்சு மாட்டாம வச்சிருக்கு. சுவர்ல ஆணி இறங்க மாட்டேங்கிறது. ஜம்பராலே துணி போட்டுத்தான் ஆணி அடிச்சுப் படங்களை மாட்ட முடியும். உன் புருஷனை அனுப்பி அதைச் செஞ்சு குடுன்னு சொல்லி யிருந்தேனே!'' என்றாள்.

''மறக்கலீங்க. நான் அவர் கிட்டச்சொல்லவும் சொன்னேன். இன்னிக்குப் போறேன், நாளைக்குப் போறேன்னு தட்டிக் கழிச்சுக்கிட்டே இருக்காரு. நான் வேலே செய்யற எடத்துக்கு வரச் சங்கோசப்படறாரோ என்னவோ!'' — ஒரு பெருமூச்சுடன் தனபாக்கியம் வீட்டை விட்டுப் புறப்பட்டாள்.

பாவம் தனபாக்கியம்! வஞ்சனை இல்லாத உழைப்பாளி. வெகுளி. சூதுவாது தெரியாது. கள்ளம் கபடு இடையாது.




''நம்ம ஐயா கையிலே சொல்லி என் வீட்டுக்காரருக்கு ஏதாச்சும் வேலே பார்த்துக் குடுக்கச் சொல்லுங்கம்மா. புண்ணியமாப் போகும். பியூன்வேலேயோ, எடுபிடிவேலேயோ எதுவாயிருந்தாலும் சரி. மாசம் பொறந்தா சம்பளம் கைக்கு வராப்பலே ஏதாச்சும்...''

ஜகதா கணவரிடம் சொல்லாமல் இல்லே. அவரும் ''ஆகட்டும், சந்தர்ப்பம் வரட்டும்'' என்று சொல்லிக் கொண்டிருந்தார்.

அன்றைக்கு ஜகதா உறுதியாகக் கூறியிருந்தாள் — ''தனபாக்கியம், ஐயா ஊர்லருந்து வந்துடட்டும். எப்படியாவது உன் புருஷனுக்கு வேலே கிடைக்க ஏற்பாடு செய்யச் சொல்றேன்.''

கணவர் பம்பாயிலிருந்து வந்ததும் முதல் காரியமாக அதைச் செய்ய வேண்டுமென்று மனத்தில் முடி போட்டுக் கொண்டு ஒய்வு எடுத்துக்கொள்ளச் சென்றாள் ஜகதா.

தெரிந்தகடைகளிலெல்லாம் ஏறிஇறங்கி எங்குமே வேலே கிடைக்காமல் அலுத்துச் சலித்து வீடு திரும்பி வந்தான் வீரப்பன். பிற்பகல் இரண்டு மணிக்குமேல் ஆகிவிட்டது. ஒரே பசி. வீட்டில் ஏதும் இருக்காது என்று தெரியும். தனபாக்கியம் காலேயில் வேலே செய்கிற இடத்திலிருந்து மிச்சம் மீந்தது ஏதாவது கொண்டு வந்திருந்தாலும் குழந்தைகளுக்குக் கொடுத்திருப்பாள். இப்போது மறுபடியும் வேலேக்குப் போயிருப்பாள்.

சே! என்ன போக்கற்ற பிழைப்பு இது! சொந்தத்தில் கடை என்று ஒன்று இருந்தால் இந்தத் திண்டாட்டம் இருக்குமா? கடை போட்டுக் கொள்வதற்கு மூலதனமாக ஒரு பத்தாயிரம் ரூபாய் கையில் இருந்தால்...

இந்தக் கற்பனையுடன் அவன் வீட்டை நெருங்கியபோது குடிசைக்குள்ளிருந்து காதில் விழுந்த தனபாக்யத்தின் குரல் அவனுக்கு வியப்பளித்தது. தான் பிற்பகலில் வேலேக்குப் போகாததன் காரணத்தை அண்டை வீட்டுக்காரிக்கு விளக்கிக் கொண்டிருந்தாள் அவள்.

''அந்த வீட்டு ஐயா வெளியூர் போயிருக்காரு. புள்ளேங்களும் வீட்டில இல்லே. அம்மா ஒண்டிதானே வீட்டில! அதனாலதான் அரை நாள் லீவு குடுத்து அனுப்பிட்டாங்க.''

சட்டென்று ஒரு தீர்மானத்துக்கு வந்த வீரப்பன் ஓசைப்படாமல் அங்கிருந்து அகன்றான்.

ஜகதா கட்டிலில் படுத்தவாறு ஏதோ பத்திரிகையைப் புரட்டிக் கொண்டிருந்துவிட்டுக் கண்ணயரப் போன சமயம் அழைப்பு மணி ஒலித்தது. ஜகதா சலிப்புடன் எழுந்து வந்து ஜன்னல் வழியே வெளியே பார்த்தாள்.

''யாரது?''

''நான்தான் வீரப்பனுங்க. தனபாக்கியத்தோட புருஷன்...'' என்று கூறியவாறு ஜன்னல் பக்கமாக வந்து நின்றான் வீரப்பன்.

ஜகதா ஓரிரு தடவை அவனைப் பார்த்திருக்கிறாள்.

''என்ன வேணும் வீரப்பா?''

''தனபாக்கியம் அனுப்பிச்சதுங்க. பூஜை ரூமில ஆணி அடிச்சுப் படங்க மாட்டணும்னு சொன்னீங்களாம்.''

''ஆமாம். சொன்னேன். காங்க்ரீட் கவர். ஜும்பர் வச்சு அடிச்சுத் துளை போட்டாத் தான் ஆணி இறங்கும்....''

''கையோட எல்லாம் கொண்டு வந்திருக் கேனுங்க. வேற எங்கேயும் வேலை கிடைக் கலே. இதையாவது செய்து குடுத்திட்டுப் போகலாமேன்னு....''

ஜகதா கதவைத் திறந்து வீரப்பனை பூஜை அறைக்கு அழைத்துச் சென்றாள். எங் கெங்கு எந்தெந்தப் படத்தை மாட்ட வேண்டும் என்று—விளக்கிச் சொல்லிவிட்டு ஹாலில் போய் உட்கார்ந்து கொண்டாள்.

கைப்பையிலிருந்து சுத்தியலையும் மற்றக் கருவிகளையும் எடுத்துக் கொண்டிருக்கும் போதே வீரப்பனின் கண்கள் சோபாவில் சாய்ந்து உட்கார்ந்திருந்த ஜகதாவைத் திருட் டுத்தனமாக நோட்டம் விட்டன. வைரக் கம்மல்கள், இரட்டை வடச் சங்கிலி, நாலு ஜோடி வளையல்கள் — மூன்று கடை வைப்ப தற்குப் போதுமான மூலதனம் வெட்டியாக இந்த அம்மாளின் மேனியில் புரண்டுகொண் டிருக்கிறது!

''அம்மா! அம்மா! ரொம்பத் தாகமா இருக்கும்மா. கொஞ்சம் தண்ணி குடுக்க றீங்களா?''

''இதோ கொண்டு வரேன்!'' என்று கூறிய ஜகதா எழுந்து உள்ளே சென்றதும் அவன் சுத்தியலைக் கையில் உறுதியாகப் பிடித் துக்கொண்டு கதவுக்குப் பின்னால் மறை வாக நின்று கொண்டான்.

தனபாக்கியத்துக்கு வீட்டில் இருக்கவே பிடிக்கவில்லை. மிச்சம் மீந்தது எது இருந் ததோ சாப்பிட்டுவிட்டுக் குழந்தைகள் விளை யாடப் போய்விட்டார்கள். ஒன்றும் செய் யாமல் உட்கார்ந்திருப்பது தனபாக்கியத் துக்குக் கட்டிப் போட்டாற் போலிருந்தது. வழக்கம்போல் வேலைக்குப் போயிருந்தால், சுறுசுறுப்பாக நேரம் போக வழியுண்டு. வீட்டைப் பூட்டிச் சாவியைப் பக்கத்துக் குடிசை ஆயாவிடம் கொடுத்துவிட்டுப் புறப்பட்டாள் தனபாக்கியம்.

தண்ணீர் கொண்டு வருவதற்காகச் சமைய லறைக்குச் சென்ற ஜகதாவுக்குத் திடீ ரென்று தலை சுற்றுவது போலிருந்தது. பித்தக் கிறுகிறுப்பாக இருக்குமோ என்று நினைத் தாள். ஆனால் மார்பில் பனிச்சென்று ஆயிரம் ஈட்டிகளைப் பாய்ச்சினாற்போல் ஏன் இந்தப் பொறுக்க முடியாத வலி! எப்படியோ தன் னைச் சமாளித்துக்கொண்டவாறு ஒருசெம்பு நிறையத் தண்ணீர் எடுத்துக்கொண்டு பூஜை அறையை நோக்கி வந்தாள்.

''இந்தாப்பா தண்ணி'' என்று கூறிக் கொண்டே பூஜை அறைக்குள் நுழைந்த அவள் இரண்டடி முன்னே சென்றிருக்க மாட்டாள். மறுபடியும் நெஞ்சில் பொறுக்க முடியாத வலி! நிற்க முடியாமல் கால்கள் தடுமாறின. கண்களை இருட்டிக் கொண்டு வந்தது. செம்பு கையிலிருந்து நழுவத் தடாலென்று தரையில் சாய்ந்து விட்டாள்.

சுத்தியலும் கையுமாக மறைந்து நின் றிருந்த வீரப்பன், தான் செய்ய நினைத்த வேலை இவ்விதம் தற்செயலாகவே நிகழ்ந்து விடுமென்று சிறிதும் எதிர்பார்க்கவில்லை. முன்னே விரைந்து சென்ற அவன், தரையில் மண்டியிட்டு, அவளுக்குச் சுவாசம் இருக் கிறதா என்று மூக்கருகே விரலைக் கொண்டு போய்ப் பார்த்தான். மூச்சு நின்றுபோயிருந் தது. நாடியைப் பிடித்துப் பார்த்தான். துடிப்பே இல்லை. கைதுவண்டு கீழேவிழுந்தது. மாரடைப்பால் சாவு! கொலைப் பழிதன்னைச் சேராது என்ற போலி நிம்மதியுடன் அவன் செயல்பட ஆரம்பித்தான்.

அவனது கரங்கள் வேகமாக இயங்கின. தங்க நகைகளை ஒன்றுவிடாமல் கழற்றி எடுத் துக்கொண்டான். கண நேரத்துக்குப் பின் வைரக் கம்மல்களையும் கழற்றி எடுத்துக் கொண்டான். எல்லாவற்றையும் மேல் துண்

31—3—1980ம் நாள் அளவில் இந் தியா ஒவ்வொரு நாட்டிலும் வாங்கியிருந்த கடன் விவரம் இதோ:

| | | கோடியில் |
|---|---|---|
| சர்வதேச அபிவிருத்தி ஸ்தாபனம் | ரூ. | 3524.52 |
| அமெரிக்கா | ரூ. | 2633.29 |
| மேற்கு ஜெர்மனி | ரூ. | 1363.78 |
| பிரிட்டன் | ரூ. | 881.70 |
| ஜப்பான் | ரூ. | 820.42 |
| ஈரான் | ரூ. | 788.46 |
| ஹாலந்து | ரூ. | 425.68 |
| கனடா | ரூ. | 376.86 |
| பிரான்ஸ் | ரூ. | 329.78 |
| உலக சேமைப்பு அபிவிருத்தி | ரூ. | 301.00 |
| ரஷ்யா | ரூ. | 186.21 |
| இராக் | ரூ. | 116.22 |
| யூகோஸ்லாவியா | ரூ. | 100.00 |
| பெல்ஜியம் | ரூ. | 72.08 |
| ஐக்கிய அரபு அமீர் | ரூ. | 58.10 |
| குவையத் | ரூ. | 45.54 |
| சௌதி அரேபியா | ரூ. | 44.25 |
| பெட்ரோல் ஏற்றுமதி நாடுகள் ஸ்தாபனம் | ரூ. | 29.71 |
| செக்கோஸ்லவாகியா | ரூ. | 29.08 |
| ஆஸ்திரியா | ரூ. | 27.65 |
| டென்மார்க் | ரூ. | 24.95 |
| இத்தாலி | ரூ. | 24.43 |
| ஐரோப்பிய பொரு-ளாதார சமுதாயம் | ரூ. | 22.69 |
| சுவிட்ஜர்லாந்து | ரூ. | 21.71 |
| அபுதாபி | ரூ. | 12.31 |
| ஹங்கேரி | ரூ. | 10.51 |
| போலந்து | ரூ. | 7.48 |
| மொத்தம் | ரூ. | 12278.41 |

இதைப் படிக்கும் நீங்கள் ஒரு கட னாளி என்பதை மறக்காதீர்கள். எவ் வளவு கடனாளி என்பதை நீங்களே முடிவு செய்துகொள்ளுங்கள்.

கமுதி திராவிடமணி

The fragrance of choice coconuts in every drop.

# Yendelux
## coconut oil



# என்டிலக்ஸ்
தேங்காய் எண்ணை

மு. மு. நாகலிங்க நாடார் சன்ஸ்

உரிமையாளர்கள் : ஸ்ரீ நாகலிங்க விலாஸ் ஆயில் மில்ஸ் கொல்லம் — கேரளா

போன் : ஆபிஸ் : 2244, 4464, மில்ஸ் : 2266, 4611

---

Trade Enquiries Solicited from wholesaie dealers only



# MARK THE MPF HALLMARK TO PICK YOUR PENCILS

Now with a superior range of

# SUJATHA

# KAVERI

# ANAND




You can be perfectly sure of pencil-quality with the hallmark of MPF—makers of better pencils for over 60 years.



**The Madras Pencil Factory**
15, Stringers Street,
Madras 600 001.

*MAKERS OF BETTER PENCILS*

ADWAVE/MPF/1618 D

---

ஆண்டாண்டு கால உத்திரவாதம் உடையது! அணிவதற்கு தங்கத்தின் தரம் உடையது!

22 காரட் ரூபா மேக்னட் கோல்டு கவரிங் நகைகள் ஒன்றே!

No. 34 Rs. 77·50 | No. 41 Rs. 85·00 | No. 22 Rs. 77·50 | No. 35 Rs. 85·50 | No. 50 Rs. 170·00 | No. 375 Rs. 16·50 | No. 114 Rs. 49·50 | No. 112 Rs. 49·50 | No. 115 Rs. 49·50 | No. 37 Rs. 49·50 | No. 182 Rs. 19·50 | No. 136 Rs. 15·50 | No. 19 Rs. 18·50 | No. 117 Rs. 62·50 | No. 81 Rs. 62·50 | No. 120 Rs. 62·50 | No. 118 Rs. 62·50 | No. 42 Rs. 170·00 | No. 51 Rs. 77·50 | No. 52 Rs. 77·50 | No. 39 Rs. 77·50 | No. 32 Rs. 85·00 | No. 16 Rs. 34·50 | No. 377 Rs. 11·50 | No. 175 Rs. 22·50 | No. 239 Rs. 6·25 | No. 370 Rs. 14·50 | No. 257 Rs. 7·00 | No. 175 A Rs. 22·50 | No. 373 Rs. 14·50

MINERVA

# கதம்ப மாளிகை

36, பாண்டி பஜார், தி. நகர் - சென்னை - 600017

பரதநாட்டியம் செட் கிடைக்கும்

டில் போட்டுச்சுருட்டி கைப்பையில் திணித்து, சுத்தியல் முதலியவற்றை மேலாக வைத்துக் கொண்டு அவன் அங்கிருந்து புறப்படத் தயாரானபோது...

''அம்மா! அம்மா!'' — வெளியே இருந்து தனபாக்கியம் அழைக்கும் குரல்.

வீரப்பன் சட்டென்று பாய்ந்து ஹாலில் இருந்த குளிர் பதனப் பெட்டிக்குப் பின்னால் போய்ப் பதுங்கிக்கொண்டான்.

''அம்மா, வாசக் கதவைத் திறந்தாப்பல விட்டுட்டு உள்ளே என்ன செய்துக்கிட்டிருக்கிங்க?'' என்று கேட்டுக் கொண்டே தனபாக்கியம் ஹாலுக்கு வந்து நின்று ஒரு கணம் சுற்று முற்றும் பார்த்தாள்.

பார்வை பூஜை அறைப் பக்கம் சென்றது.

தரையில் மல்லாந்து விழுந்து கிடந்த எஜமானி அம்மாளின் உருவத்தைக் கண்டதும் அவள், ''அம்மா!'' என்ற அலறலுடன் அருகே ஓடினாள்.

எஜமானி அம்மாளின் உயிரற்ற உடல் நகைகளை யெல்லாம் இழந்த வெறுமைத் தோற்றத்துடன் காட்சியளித்ததைக் கண்டு அவளது நெஞ்சம் ஓலமிட்டது. கூச்சலிட்டு ஆட்களைக் கூட்டுவதற்காக அவள் வெளியே ஓடியபோது... வாயில் நடையில் விடப்பட்டிருந்த் செருப்பு.... இது....

கூச்சலிடுவதற்கு ஆயத்தமா யிருந்த குரல் கப்பென்று உள்ளடங்கிப் போயிற்று. பதற்றம், பரபரப்பெல்லாம் எங்கோ மறைந்தன. உடல் முழுவதும் பீதியால் வியர்த்தது. கண நேரம் கூட அங்கே இருந்தால் ஆபத்து என்றுஉணர்ந்தாள். அடிமேல் அடி எடுத்து வைத்துக் கதவருகே வந்தாள். கதவை லேசாகத் திறந்து வெளியே யாருமில்லை என்பதை உறுதிப்படுத்திக் கொண்டதும் செருப்பு இரண்டையும் எடுத்துப் புடவைத் தலைப்பில் மறைத்துக் கொண்டு சட்டென்று வெளிக்கிளம்பி வேகமாக வீதியில் நடந்தாள்.

இப்போது அவள் செய்ய வேண்டுவது என்ன? தன் கணவன்தான் அந்தப் பாதகத்தைச் செய்தவன் என்பதில் அவளுக்குச் சந்தேகமே இல்லை. அவன் விட்டுச் சென்றிருந்த செருப்பே அதற்குச் சாட்சி!

தன் கணவன்தான் அந்தக் கொலையையும் இருட்டையும் செய்தான் என்று வாய்த் திறந்து சொல்வதற்கும் அவள் மனம் துணியவில்லை. தானே தன் கணவன் தூக்கில் தொங்குவதற்குக் காரணமாக இருக்க முடியுமா?

உடம்பில் ஜீவனே அற்றுப் போனது போன்ற சோர்வுடன் வீடு திரும்பிய அவள், அங்கமெல்லாம் ஓய்ந்து துவள, அப்படியே தரையில் படுத்து விட்டாள். எல்லையில்லாத அசதி அவளை ஆட்கொண்டது. உறக்கம் அவளது உணர்வுகளை மறக்கச் செய்தது.

அவள் மீண்டும் கண் விழித்தபோது அந்தப் பயங்கர நிகழ்ச்சி பற்றிய நினைவெல்லாம் மறுபடியும் அவளது மனத்தில் வந்து மோதின. 'எப்படிப்பட்ட உத்தமி அந்த அம்மாள்! அவளது உயிரைப் பறித்த பாதகன் யாரென்று தெரிந்தும் மனதறிந்து மூடி மறைத்தேனே! என் மனச்சாட்சி என்னை மன்னிக்குமா? கூடாது. விளைவு என்ன ஆனாலும் சரி, எனக்குத் தெரிந்த உண்மையை வாய் திறந்து சொல்லியே தீரவேண்டும்.'

இந்தத் தெளிவு பிறந்ததும் அவள் பரபரப்புடன் வெளியே வந்தாள்.

அதே சமயம் ஒரு போலீஸ் வேன் அவள் குடிசையருகே வந்து நின்றது. என்ன? அவள் தகவல் கொடுப்பதற்குத் தேவையில்லாமல் குற்றவாளியைக் கண்டுபிடித்துவிட்டார்களா?

ஆனால் இதென்ன! வேனுக்குள்ளிருந்து உயிரற்ற ஓர் உடலை அல்லவா இறக்குகிறார்கள்! அது...

''ஐயோ! உங்களுக்கு எப்படி இந்தக் கதி நேர்ந்தது?'' என்று அலறியவாறு அருகே ஓடினாள் அவள்.

அந்த உடல் கருநிறம்போல் நீலம்பாரித்திருந்தது. 'தெய்வமே! உன் கோபமே இவரை இப்படிக் கட்டெரித்து விட்டதா? தலை சுற்றுகிறதே! நினைவே தப்பிவிடும்போல் இருக்கிறதே!'

போலீஸ் அதிகாரி கடுத்தமான குரலில் கூறுவது காதில் விழுகிறது. — ''உன் எஜமானியைக் கொலை செய்யத் திட்டமிட்டு, அவங்க நகைகளைச் சூறையாடிய குற்றவாளி உன் புருஷன். தப்பியோடும் சமயத்தில், யாரோ உள்ளே வருவதை அறிந்து ஃப்ரிஜ்ஜுக்குப் பின்னால் ஒளிந்து கொண்டிருக்கிறான். ஃப்ரிஜ்ஜின் பழுதாகியிருந்த எர்த் வயரில் கால் மாட்டிக் கொண்டு மின் தாக்குதலுக்குப் பலியாகி விட்டான்...''

அதற்கு மேல் அவர் பேசிய வார்த்தைகளை ஏற்காமல் புலனியக்கங்கள் ஒடுங்கிப்போக, நினைவிழந்து தரையில் சாய்ந்தாள் தனபாக்கியம். அவளது வாய் மட்டும் 'தெய்வ கோபம்... தெய்வ கோபம்' என்று முனகிக் கொண்டிருந்தது.



ஆசிரியர்: ''பானிபட்டைப் பற்றிக்கேட்டா உங்க பையன் படாபட்டைப் பற்றிச் சொல்றான், சரியான சினிமா பைத்தியம் போலிருக்கே?

நண்பர்: அதெல்லாம் ஒண்ணுமில்லே. நீங்க சந்தோஷப் படுவீங்கன்னு அப்படி சொல்லியிருப்பான்! —அ. தெ.

# "புரையோடிய புண்கள்"

இந்த முறை கதவு 'கிறீச்'சிட்டதும் அரை நம்பிக்கையோடுதான் வாசல் பக்கம் பார்த்தாள் ஜானகி. ஆனால் அவள் நம்பிக்கை பொய்க்கவில்லை. வந்தது அவள் கணவர் தான்! பின்னே என்ன? ஒரு மணி நேரமாய் சலவைத் தொழிலாளி, போஸ்ட் உமன், பக்கத்து வீட்டு மாமி இப்படியாக அவள் எத்தனை முறைதான் ஏமாந்து போவாள்!

''உஸ்... அப்பாடா...'' பிரளயமாய்ப் பெருகும் வியர்வையைத் துடைத்துக்கொண்டார்.

ஆவலைக் கண்களில் தேக்கியபடி ''இந்த மோரைச் சாப்பிடுங்கோ'' என்று சாமர்த்தியமாக மோர் டம்ளரை நீட்டினாள் ஜானகி.

அவளை நிமிர்ந்து பார்த்தார். மோரை வாங்கினார். மளமளவென்று குடித்துவிட்டு டம்ளரை நீட்டினார்.

''உட்கார் ஜானகி... அந்த மாமி குணம் அன்னிக்கே தெரிஞ்சதுதானே! வைரத்-தோட்டிலேயே குறியாக இருக்கிறாள். நீ சொன்ன மாதிரி 'மாசாமாசம் ஐந்நூறு ரூபாய் சம்பளம் வாங்கறவதானே! ஒரு வருஷம் அவ சம்பாதிக்கலேன்னு நினைச்சுண்டு சேர்த்து வைச்சா வைரத் தோடு ஆறது' என்றேன்.'' கொஞ்சம் பெருமூச்சு விட்டுக் கொண்டார்.

ஜானகி மௌனமாக இருந்தாள். ஊடே பேசுவது அவருக்குப் பிடிக்காது. அவரே தொடர்வார்....

''பெண்ணைப் பெறுகிறதை விடப் புண்ணுக்குச் சுமக்கிறது எவ்வளவோ மேல்!... 'எப்படியாவது முடிச்சுடுங்கோ ஏடாகூடம் பண்ணிடாதீங்கோ'ன்னியே... அவ என்ன கேட்டா தெரியுமா?''

ஜானகி பொறுமையுடன் அவர் முகத்தையே பார்த்தபடி இருந்தாள்.

'''பாங்கிலே வேலை பார்க்கிற மாப்பிளே வேணும்னு ஆசைப்பட்டா மட்டும் போறுது! இன்ஸ்டால்மெண்டிலே வைரத் தோடா? ஏதோ பொண்ணு சம்பாதிக்கிறான்னுதான் இருபது பவுனுக்கு ஒத்துண்டேன். முப்பது பவுன் நகையும், வைரத் தோடுமா வந்த பொண்களைக் கழிச்சான்'னு அடுக்கறா.''

''கடைசியிலே என்னதான் சொன்னா?''

'''வைரத் தோடு வர்றவரை பொண்ணு உங்க வீட்டிலேயே இருக்கட்டும். அதுக்குப் பின்னாலேதான் சாந்தி முகூர்த்தம். ஒரு வருஷமும் சம்பளம் 'டாண்ணு' ஒண்ணாந் தேதி இங்கே வந்துடணும். இல்லேன்னா வைரத் தோடு வர்றதுக்குள்ளே பொண்ணு வயத்தைத் தள்ளிண்டு நிப்பா'ங்கறா.''

''இவ்வளவுதானே?'' ஜானகியை ஆச்சரியத்தோடு பார்த்தார் ஜகந்நாதன். ''என்ன இவ்வளவு சுலபமாச் சொல்லிட்டே?''

''ஒரு வருஷத்திலே வேற நல்ல இடம் அமையாமப் போயிட்டா? இப்பவே வயசு இருபத்தஞ்சாச்சு... பொண்ணும், புடலங்காயும் முத்தினாக் கழிச்சுடுவா... ஒரு வருஷம் இதோ ஓடிடும். பல்லைக் கடிச்சுண்டு இருப்போம். ஜெயந்திக்கு மாப்பிள்ளையைப் பிடிச்சிருக்கு... குழந்தை மனசுதானே முக்கியம்!''

ஜெயந்தியிடம் இருந்த ஒரே ஒரு மாற்றம். கழுத்திலிருக்கும் மஞ்சள் கயிறு. அதே மாதிரி திருவல்லிக்கேணி வெங்கடாசலம் செட்டித் தெருவிலிருந்து வந்து வேலை பார்த்துக் கொண்டிருந்தாள். இன்னும் மாமியார் கடன் ஒன்பது மாதம் பாக்கி.

கனவுக்குப் போய் மஞ்சள் தீற்றிக்கொண்டு வந்தாள். 'இந்தக் தடவை நோன்பு இராத்திரி ஒரு மணிக்கு வந்ததே' என்று அலுத்துக் கொண்டு மாமியார் காரடையான் நோன்பு நோற்றதும் சிரமத்தைப் பார்க்காமல் ஆட்டோவில் கொண்டு விட்டு விட்டாள்.

குமாரை நினைத்தபோதுதான் ஜெயந்திக்குச் சிரிப்பாய் வந்தது. 'இதென்ன கோழைத்தனம்! அம்மா முந்தானையில் ஒளிந்து கொண்டு... பேசாமல் வைரத்தோட்டையே கல்யாணம் பண்ணிண்டிருக்கலாம்! பழைய தலைதீபாவளி மாப்பிள்ளை மாதிரி திருட்டுப் பூனை பார்வையோடு எத்தனை தரம் தான் தண்ணீர் குடித்திருப்பார்!

மேஜையில் பைல்கள் குவிந்திருந்தன. இன்றைக்கு ஹேமா லீவு. இரண்டு பேருக்கும் கிட்டத்தட்ட ஒரே நேரத்தில் கலியாணம்.... மசக்கை தலை தூக்க முடியலையாம்... நேற்றே சொன்னாள், இன்று லீவு போடப் போவதாக!

''கிணிங், கிணிங்...'' போன் கூப்பிட்டது.

''ஹலோ'' – ஜெயந்தி நினைவுகளை உதறிக் கொண்டு பேசினாள்.

இது அவளுக்கேதான்! அந்தக் குரல்... அவளுக்கு மெய் சிலிர்த்தது.

பாரதி சிலை அருகே அன்று மாலை அவன் காத்திருக்க வேண்டுமாம். ஏதோ முக்கியமான விஷயமாம்!

போனை வைத்து விட்டான் குமார். எதற்காக இந்தச் சந்திப்பு?

குமார் ரொம்ப டிரிம்மாக இருந்தான். ஜெயந்திதான் களைத்திருந்தாள். அவன் சொல்லச் சொல்லக் களைப்பு மேலும் கூடியது தான் மிச்சம்!

''என்ன ஜெய்... பேசாம இருக்கே? உனக்கு ஆசையே இல்லையா?''

ஜெயந்தி தீவிரமாய்ச் சிந்தித்தாள். ''ஆசை வேறு, நடப்பு வேறு... நாம அக்கினி

சாட்சியாய்த் தாலி கட்டிண்ட கணவன் — மனைவி. திருட்டுத்தனமாய்...தேவைதானு?''

ஜெயந்தியின் மறுப்பு குமாரின் முகத்தில் இறுக்கத்தை ஏற்படுத்தியது.

''வைரத்தோடு வந்து நீ வாழ வரும் போதுஅம்மாவுக்கு மருமகளாக இருக்கலாமே தவிர, என் மனைவிங்கறது வெறும் பட்டமாகத்தான் இருக்கும்.''

பிளாக் மெயிலா? பயமுறுத்தலா?

''சாந்தி முகூர்த்தம்கிறது நாமா நிர்ணயிக்கிறதுதானே? தேவ முகூர்த்தமா? அது ஆசைப்பட்டபோது நடக்காம...? தவிக்கிற போதுதான் தண்ணீர் வேணும்... அப்புறம் குடம் குடமாக் குளிச்சாக் கூட முதல் வறட்சி மறந்துடுமா?'' — குமார் பேசிக்கொண்டே போனுன்.

ஜானகி வாசலுக்கும்உள்ளுக்குமாக் நூறு தடவையாவது அலைந்திருப்பாள். ஜெயந்தி எப்போதும் இவ்வளவு நேரமாக்கியதில்லே.

''ஏன்மா லேட்?'' பயந்து கொண்டேதான் கேட்டாள் ஜானகி.

''எல்லா விசாரணையும் வாசல்லேயே தானு? கொஞ்சம் பொறுமையா இரும்மா. நாளைக்கு லீவு போட்டிருக்கேன். குழந்தைகளும் அப்பாவும் வெளியே போன பிறகு... இது விவரமாய்ச் சொல்ல வேண்டியது...''



ஜானகிக்கு 'என்னவாகியிருக்கும்' என்று ஆவல் மண்டையைக் குடைந்தது.

"ராத்திரியெல்லாம் 'புழுவாத் துடிச்சிண்டிருந்தேன். ப்பூ. இவ்வளவுதானா?''

''என்னம்மா, இவ்வளவு லேசா சொல்லிட்டே?''

''மாப்பிள்ளை சொன்ன மாதிரி என்னிக்கிருந்தாலும் அவர் சொத்து. ஒரே ஒரு குறை... அவரும் உன்கூட வந்திருந்தா ஆரத்தி கரைச்சிருப்பேன். என்னையும் அவங்கம்மா மாதிரி நினைச்சிட்டேளே... நான் பொண்ணைப் பெத்தவ...''

ஜானகியின் முகத்தில் அலாதி நிம்மதி. ஜெயந்திக்கு அழுவதா சிரிப்பதா என்று தெரியவில்லை.

''ஒரு விஷயம் சொல்றேன் கேட்டுக்கோ... எனக்குச் சாந்திமுகூர்த்தம் ஆகிறப்போ நீ வயத்திலே ரெண்டு மாசம்.''

ஓ, தாய்க்கிட்டது தலை மகளுக்கா? மேலே தொங்குகிறது பாம்பு என்கிறாள் அவள். இல்லை பழுதை என்கிறாளே அம்மா! போதாக் குறைக்கு மாப்பிள்ளையை அட்ஜஸ்ட் செய்து கொள்ளும்படி அறிவுரை வேறே!

பழத்தைக் கவைத்த மந்தி மரத்தை மறந்துவிடுமா? நாளைக்கு வருகிறேன் என்று குமார் போன் பண்ணப் பகலில் ஜெயந்தி அரைநாள் லீவு போட்டுவிட்டு, பெர்மிஷன் எழுதிவிட்டு வீட்டில் இருக்க ஜானகியே கோவிலுக்குப் போறேன் என்ற பெயரில் வீட்டை ஒழித்துக் கொடுக்க... குமாருக்குக் கொண்டாட்டமாயிற்று.

"என்ன ஜெய்... இப்படி!... பேசாம ஒரு லேடி டாக்டரைப் பார்த்துடு... படிக்காத பெண்ணாட்டம் இதைப் பெரிசுபடுத்தலாமா? அம்மா இதை ஒத்துக்கவே மாட்டா. தா, தைன்னு குதிப்பா.. அவ பழங்கால மனுஷி... தேவையில்லாத பிரச்னை...''

''இதோ பாருங்கோ... இது நமக்கு முதல் குழந்தை. இதை அழிக்க எனக்கு மனசு வரல்லே. நீங்க ஆண். சுலபமா சொல்லிட்டேள்! உங்களுக்குச் சொல்லத் தைரியம் இல்லேன்னா உங்கம்மாகிட்டே நான்சொல்றேன். நான் விபசாரம் பண்ணியா கருவைச் சுமந்திண்டிருக்கேன்? ஊரெல்லாம் தூஷிக்கிறதை விட...''

''அதிகப் பிரசங்கி'' — குமார் எரிந்து விழுந்தான். கோபத்தில் அவன் முகம்தான் எத்தனை விகாரமாக மாறுகிறது!

'மாப்பிள்ளை சொல்றதுதான் சரி'—ஜானகியும் நச்சரித்தாள். குமார் அதற்குப் பிறகு ஜெயந்தியை நேரில் சந்திக்கவே இல்லை. ஆனால் தினம் போனில் 'டாக்டரைப் பார்த்தாயா?' என்று அக்கறையோடு விசாரித்தான். இந்த அழகில் சொல்லவே அருவருக்கும் மிரட்டல்கள் வேறு! குமாரோடு மீதிக் காலத்தைக் கழிக்க வேண்டும் என்ற நினைப்பே அவளுக்கு வெறுப்பாயிருந்தது.

என்ன ஆண்மகன் இவர்! முதன் முதல் தந்தையாகப் போகிறோம் என்றுகர்வத்தோடு ஏற்றுக்கொள்வதற்குப் பதில், ''இது என் குழந்தையே இல்லை என்று சொல்லிவிடுவேன்' என்று சொல்ல வெட்கமாக இல்லை!

வேறு வழியில்லை என்றபோது அருவருப்போடுதான் லேடி டாக்டரைப் போய்ப் பார்த்தாள்.

'என்னம்மா இது... செய்துகொள்ளவேண்டும் என்று முடிவெடுக்கும் பட்சத்தில் முன்னாலேயே வரக்கூடாதா? இது 'முதல்' என்கிறாய். ரொம்பக் கஷ்டப்படுவாய். இருந்துவிட்டுப் போகட்டுமே'என்றாள்லேடிடாக்டர்.

அவளுக்கென்ன தெரியும் இவள் பிடுங்கல்!

கடைசியில் ஜானகியும் வற்புறுத்தக் கையெழுத்து வாங்கிக்கொண்டுதான் செய்தான். மாலையில் வீடு திரும்பிவிட்டார்கள். ஜெயந்திக்கு எல்லாம் வெறுமையாக இருந்தது. இரண்டு மாதமாக அவளை மயக்கமென்றும், வாந்தியென்றும் படுத்தி வைத்த கரு இப்போது வலுக்கட்டாயமாக வெளியேற்றப்பட்டது என்று நினைத்தபோது எல்லாமே சூன்யமாக இருந்தது.

மறுநாள் ஜானகி தடுத்தும் கேளாமல் பச்சைத் தண்ணீரில்தான் குளித்தாள். அதுவோ, இல்லை, மன ஏக்கங்களோ, உடல் பலவீனமோ ஜன்னி கண்டு விட்டது.

கண்டபடி பிதற்றினாள். டாக்டர் வந்து பார்த்தார். மாத்திரைகளும் ஊசியுமாக வைத்தியம் நடந்தது.

ஜகந்நாதனுக்கு விஷயம் தெரிந்ததும் ஜானகியை அவர் பார்த்த பார்வை அவள் ஆயுளுக்கும் போதும்! மாமியார் வீட்டுக்குச் செய்தி போயிற்று. எல்லாரும் ஓடிவந்தனர்.

ஜெயந்தியை ஆஸ்பத்திரியில் அட்மிட் பண்ணக் குமார்தான் உதவினான். திரும்பி உடலைக் கொண்டு வந்து கர்மாக்களைச் செய்ததும் அவன்தான்! ஒரு வைரத் தோடு வைரமான அவள் வாழ்வையே அறுத்துவிட்டது. இனிமேல் மாமியாரிடம் ''என் பெண் வைரத்தோட்டுக்காகத் தவணை கட்டிய கங்கப் பணத்தைத் திருப்பித் தாருங்கள்''என்று கேட்க முடியும்?

'அவளுக்குக் கொடுப்பினை இல்லை' என்று மாமியார் முந்தானையில் கண்களை ஒற்றிக் கொண்டு மண மேடையில் அமர்ந்திருக்கும் குமாருக்கு அட்சதை போடுகிறாள். அடுத்த மருமகள் அவளுக்குக் கிடைத்து விட்டாள்!

ஆனால் வைரத் தோட்டுக்காக வாழ்வையே பணயம் வைத்த ஜெயந்திகளின் பிரச்னை என்று தீரும்? தீர்த்து வைப்பவர் யார்?

## உங்கள் கேசம் அடர்த்தியின்றி சக்தியின்றி இருக்கிறதா? உங்கள் கேசத்தைப் பக்குவப்படுத்தி அழகையும் ஆரோக்கியத்தையும் அளிக்கிறது...




செழுமையான புரதப்போஷாக்கு நிறைந்த

## ஹேலோ எக் ஷாம்பூ

ஊட்டம் குறைந்த நிலையில் உங்கள் கேசம் அடர்த்தியின்றியும், சக்தியின்றியும், ஆரோக்கியமின்றியும் காணப்படுகிறது.

பட்டுப்போன்ற, பொன் நிறமுள்ள வழவழப்பான ஹேலோ எக் ஷாம்பூ செழுமையான புரத ஊட்டம் நிறைந்த உத்தியின் மூலம் உங்கள் கேசத்தை சீராகப் படியவைத்து அதற்குத் தேவையான எல்லா ஊட்டங்களையும் அளிக்கிறது. உங்கள் கேசம் அழகாக ஆரோக்கியமாக, அடர்த்தியாகத் திகழ்கிறது.

ஹேலோ எக் ஷாம்பூவின் செழுமையான நுரைவளம் உங்கள் கேசத்தில் புகுந்து அதை பொலிவுடனும் தூய்மையான பளபளப்புடனும் திகழச் செய்கிறது.

**ஹேலோ எக் ஷாம்பூ...**

**அழகிய அடர்த்தியான ஆரோக்கியமான கேசத்திற்கு**

HES. G. &. TM




# ஐஸ் கிரீம்

விற்பனையாளர்கள் கவனத்திற்கு

## ஐஸ்கிரீம் - பால் - ரோஸ்மில்க்

முதலிய பொருள்களில் கொழுப்பு சத்து, சர்க்கரை, கலர் ஆகியவை உணவு கலப் படத் தடை சட்ட விகிதங்களில் இருக்கிறதா என்று பரிசோதனை செய்து பாருங்கள்.

விபரங்களுக்கு :

**ஸ்ரீ கணேஷ்ராம்ஸ் அனலிடிகல் லாபொரடரீஸ்**

197, தம்பு செட்டி தெரு,
சென்னை - 600 001

போன் : 20402, 26393

---

# அறுவை சிகிச்சை இன்றி மூலத்தை சுருக்குவீர் நமைச்சலையும் வலியையும் அபூர்வ மருந்தால் விரட்டுவீர்

நியூயார்க்—மருத்துவ விஞ்ஞானத் துறை இப்போது பெருமளவில் மூலநோயை அறுவை சிகிச்சை இன்றி சுருக்கும் ஒரு மருந்தைக் கண்டு பிடித்துள்ளது. மூல நோயால் ஏற்படும் வலியும் நமைச்சலும் நீங்கி, அதி விரைவில் மூலம் சுருங்கி குண மேற்பட்டிருப்பதை டாக்டர்களின் பரிசோதனைகள் நிரூபித்துள்ளன. பல ஆண்டுகள் மூலநோயால் துன்புற்றோர் கூட, "மூல நோய்ப் பிரச்சனை முடிந்துவிட்டது" என்று மகிழ்வதாக கூறப்படுகிறது.

இப் புதிய மருந்தான ப்ரெபரேஷன் எச் களிம்பு, மூலத்தை சுருக்க உதவுவதோடு, நமைச்சலை நீக்கி வலியைத் தணிக்கிறது; மலப் போக்கின் போது வலியைக் குறைத்து எளிதாக்குகிறது.

ப்ரெபரேஷன் எச், இடும் குழாயுடன், 30 மற்றும் 50 கிராம் ட்யூபுகளில் எல்லா கெமிஸ்டுகளிடமும் கிடைக்கிறது.

* Regd. User of TM : Geoffrey Manners & Co. Ltd.

252-PH 92 TAM







# இவர்கள்

''நாட்டிய நாடகம் சம்ஸ்கிருத மொழியில் இருந்தாலும் என்னை மிகவும் கவர்ந்தது. தனஞ்செயன் தம்பதி அசோகரின் வாழ்க்கையில் ஒரு பகுதியை அற்புதமாகக் காண்பித்து விட்டார்கள். இசை வழங்கிய அரவிந்தாக்ஷனும் பிரமீளாவும் தனியே பாராட்டப்பட வேண்டியவர்கள். சம்ஸ்கிருதப் பாடல்கள் இவ்வளவு இனிமையான இசையுடன் அமைய முடியும் என்று இன்றுதான் எனக்குத் தெரிந்தது. ஆட்டுக் குட்டிகளாக வந்த இரு சிறுவர்கள் முதல் அசோகராக வந்த தனஞ்செயன்வரை எல்லாரும் அத்தனை ஒழுங்குடன் கலையழகு சொட்டஆடி நடித்ததை வெகுவாக ரசித்தேன்!''—விமர்சனம் வழங்கியவர்சட்ட மன்றத் தலைவர் மாண்புமிகு கா. ராசாராம். சந்தர்ப்பம்: பரத கலாஞ்சலி குழுவினர் வழங்கிய 'சங்கமித்ரா' நடனநாடகம் முடிந்த பிறகு.

—சாருகேசி

'சுஜாதா'வின் டி.வி. பேட்டி. எழுத்தில் கை கொடுக்கும் நகைச்சுவை உணர்வு, அவருக்குப் பேச்சிலும் கை கொடுத்தது. ''புத்திசாலியான பெண்களைப் பற்றி நீங்கள் எழுதுவதில்லையே?'' என்று ஒரு பெண் கேட்டபோது, ''பெண் யந்திரம் நாவலில் கதாநாயகி வித்யாவைப் பற்றி சுஜாதா குறிப்பிட்டார். 'அவளா புத்திசாலி!' என்று எல்லோரும் ஏக காலத்தில் தாக்கினபோது, சுஜாதா சிரித்துக்கொண்டே ''உங்களைச் சந்தித்து விட்டேனே? இனிமேல் புத்திசாலியான பெண்களைப் பற்றி எழுதுவேன்!'' என்றார்.

வேறு ஒருவர், சு. சமுத்திரம், சுந்தர ராமசாமி, பூமணி என்று எழுத்தாளர்களின் பட்டியலை அடுக்கிக்கொண்டே போனபோது, சுஜாதா, ''வண்ண நிலவன்? அவரை விட்டுவிட்டீர்களே?'' என்றார். ''அந்தத் தரத்தை எட்டிப் பிடிக்கும் அளவுக்கு நானும் கதைகள் எழுதியிருக்கிறேன்'' என்றார் தன்னம்பிக்கையுடன்.

—தமயந்தி

தமிழ் நாடு அரசு புதிதாய் அமைத்துள்ள 'தமிழ் பழங்கலை இயக்கத்தின் இயக்குனராய் திரு மீ. ப. சோமசுந்தரம் (சோமு) நியமிக்கப்பட்டுள்ளார். கடந்த ஆறும் தேதி பதவி ஏற்ற இவரது அலுவலகம், தலைமைச் செயலகத்தில். இந்த இயக்கம் ஆரம்பிக்கப் பட்டதன் நோக்கம்: ஒன்று, தலைநகரில், மேல் நாடுகளில் உள்ளவை போல் சீரமைப்பும், கலைப் பாங்கும் கொண்ட ஒரு அருங்காட்சியகம் அமைத்தல். மற்றொன்று தமிழின் சிறப்பையும், தமிழ் மக்களின் மேம்பாட்டையும் எடுத்துக் கூறுகிற பழந்தமிழ்ச் சுவடிகளையும், தொன்மையான நூல்களையும் அச்சிட்டு வெளியிடல். மேற்கூறியவை தவிர, 'தமிழ்க் கலைக் களஞ்சியம்' தொகுதிகளின் முதல் பதிப்பினைப் புதுப்பித்தல், தமிழ் பல்கலைக் கழகம் நிறுவுதல், உலகத் தமிழ்ச் சங்கம் அமைத்தல் போன்ற பணிகளிலும் தமிழக அரசுக்கு உதவும்படி திரு சோமு கேட்டுக் கொள்ளப் பட்டுள்ளார்.

'தினமணி' — இந்தப் பெயரில் மலேஷியாவில் ஒரு செய்தித்தாள் வெளிவருகிறது. இப்பத்திரிகையின் விளம்பரப் பகுதி ஆசிரியரான திரு சூரிய நாராயணன் (புனைப பெயர் சூரியன்), மற்றும் சிலர் அடங்கிய மலேஷியக் குழு ஒன்று தமிழக சுற்றுலா வளர்ச்சித் துறையும், மலேஷியன் ஏர்லைன்ஸ் ஸிஸ்டமும் இணைந்து செய்த ஏற்பாடுகளின்படி தென்னிந்தியப் பயணம் ஒன்றை மேற்கொண்டது. திரு சூரியன் சொன்னார்:

மலேஷியாவில் இலக்கிய கர்த்தாக்கள் பலர் இருந்தாலும், சுஜாதா, லக்ஷ்மி, சாண்டில்யன், சிவசங்கரி, புஷ்பா தங்கதுரைக்குத்தான்வாசகர்களிடையே வரவேற்புமிகுதி.

ரொம்ப பாபுலரான அரசியல்வாதி கலைஞர். சினிமா உலகில் கமல் (பெண் ரசிகைகள் மிகுதியாம்) ரஜினி, ஸ்ரீதேவி (நிறைய ரசிகர்கள் இளைஞர்களாம்) சரிதா. மௌன கீதங்கள் சக்கைப் போடு போடுகிறதாம்.

இந்தியப் படங்கள் எல்லாமே சென்சார் செய்யப்படுகின்றன. கொஞ்சம் ஆபாசமான, வன்முறையான காட்சிகள் வெட்டிவிடப்படுகின்றன. தமிழ்ப் படங்கள் பல வீடியோ டேப்களில் வாடகைக்குக் கிடைக்கின்றன. வாடகை 5 டாலர்கள்.

—எஸ். சந்திரமௌலி

அவர்களது வறுமையைத் தவிர ஜனங்கள் பல அநியாய வரிகளையும் கொடுமைகளையும் பொறுத்துக் கொள்ளவேண்டி வந்தது. அரசர்கள் தங்களுக்குள் சண்டை போட்டுக்கொண்டே இருந்தார்கள்.

-ஜான் டி பிரிட்டோ

## 21

அர்ச்சுனன் காட்டுக்கு ஊடே விரைவாகச் சென்றான். ஒரு ஓடையைப் பின்பற்றி நெடுந்தூரம் சென்று, ஒரு பரந்த கருங்கல் பாறை வெளியைக் கடந்து புக்கராஜா குளத்தின் கரை வழியாகப் பிரயாணித்து, சிறிது தூரம் ஒற்றையடிப் பாதையில் சிரமப்பட்டுக் கடைசியில் அந்தச் சந்திரகிரிச் சாலையை அடைந்தான்.

இருள் கரைந்து கொண்டிருந்தது. கிழக்கே உஷையின் குறுநகை குங்குமமிட்டது. குதிரை மிகவும் சோர்ந்து தலையைத் தொங்கவிட்டது.

ஆச்சரியமாக அவன் நிறுத்தி வைக்கப் பட்டிருந்த இடத்தில் அவனது பரிவாரங்களைக் காணவில்லை.

அதற்குப் பதிலாகக் காரிவண்ணன் என்ற குதிரை வீரன் மட்டும் நின்று கொண்டிருந்தான்.

''ஐயா வந்ததும் அழைத்துக் கொண்டு வரச் சொன்னாங்க'' என்றான் இரு கைகளாலும் வணங்கி.

''எங்கே போனார்கள்? என்ன நடந்தது?'' என்று பரபரப்புடன் கேட்டான் அர்ச்சுனன்.

''ஏதோ செய்திவந்தாப்போல. மாமுண்டி சத்திரத்துக்கு உங்களைக் கூட்டியாரச் சொன்னாங்க.'' என்றான் வீரன்.

''வா, போகலாம்'' என்று அவர்கள் விரைந்தார்கள். அர்ச்சுனன் குதிரை கடந்த பல தினங்களில் மிகவும் உழைத்திருந்தது. இன்று அவ்வளவு முழு மனத்துடன் அது ஒத்துழைக்கவில்லை. எனவே சத்திரம் போய்ச் சேருவதற்குள் விடிந்து ஒரு நாழிகை ஆகி விட்டது.

சத்திரம் சாலையை விட்டு ஒதுங்கி இருந்தது. வாசலில் நிறையக் குதிரை வீரர்கள் நின்றார்கள். அர்ச்சுனன் தன் வீரர்களை இனம் கண்டு கொண்டான். சில புதியவர்கள் அங்கே தென்பட்டார்கள்.

அர்ச்சுனன் வருவதை அடுத்து வீரமாலி சத்திரத்து இருட்டிலிருந்து வெளியே வந்து அவனை வரவேற்றான்.



"ஐயா, அவசரம். உள்ளே ராஜா வேங்கடர் இருக்கிறார்." என்று பரபரத்துக் கூறினான் வீரமாலி.

அர்ச்சுனனுக்கு ஆச்சரியமாக இருந்தது. ஒரே எட்டில் நான்கு படிகள் தாண்டி உள்ளே ஓடினான்.

உக்கிராண அறையில் வேங்கடரைத் திண்டுகள் போட்டுப் படுக்க விட்டிருந்தனர்.

அவர் மூக்கிலிருந்து இரத்தம் ஒழுகிக் கொண்டிருந்தது. காலையும் கையையும் துவள விட்டு மிகவும் சோர்ந்து, நைந்த துணி போல் கிடந்தார்.

"மகாராஜா!" என்று நெஞ்சு பொங்கக் கூறினான் அர்ச்சுனன்.

அவர் அருகில் மண்டியிட்டு அவரது வலது கையைப் பற்றிக் கண்களில் ஒற்றிக்கொண்டான்.

வேங்கடர் மத்திய பிராயத்தில் இருந்தார். முகத்தில் களைப்பினால் ஏற்பட்ட முதுமை. நெற்றியில் அவர் வயதுக்கு ஒவ்வாத சுருக்கங்கள். மேலே தூசியும் புழுதியும் படிந்த பட்டு அங்கியை அணிந்திருந்தார்.

அர்ச்சுனனுக்குத் துயரம் பொங்கி வந்தது. பிரசித்தி பெற்ற விஜயநகர சாம்ராஜ்யத்தின் மாமன்னரா இவர்?

ஹரிஹரர், புக்கர், கிருஷ்ணதேவராயர் போன்ற மாமன்னர்களின் வரிசையில் வந்தவரா இவர்?

பாவம், ஒரு குறுநில மன்னர் போல் மாட்சிமை இல்லாது இப்படி ஒரு வழிப் போக்குச் சத்திரத்தில் அனாதை போலக் கிடக்கிறாரே!

அர்ச்சுனன் முன்னால் பெரியவர்கள் வர்ணிக்கும் விஜயநகரமும் அதன் ராஜசபையும் தோன்றியது.

சேனைகள் என்ன, பரிவாரங்கள் என்ன, மந்திரி குழாம் என்ன, தளவாய்கள் என்ன, ராயசங்கள் என்ன, விற்பன்னர்கள் என்ன, கவிஞர்கள் என்ன, அஷ்ட திக்கஜங்கள் என்ன அணிவரிசையான தேவதாசிகள் என்ன, வெள்ளை தேசப் பிரதிநிதிகள் என்ன, வாய் புதைத்த குறுமன்னர்கள் என்ன!

இப்படி அத்தனை ஜனங்களும் கலந்து ஜொலித்த கிருஷ்ண தேவராயரது ராஜ சபை எங்கே? அதன் கம்பீரம் எங்கே? அதன் கீர்த்தி எங்கே?



எல்லாம் ஒரு கனவாய்ப் போய்விட்டதே! அந்த விஜயநகர ஊரே அழிந்து புல் முளைத்து விட்டதே! அதை அடுத்து ஆனகொந்தியும் அழகில்லாமல் ஆகிவிட்டதே!

எங்கேயோ மலைக்கு இடுக்கில் இருக்கும் சந்திரகிரியில் பதுங்கிக் கொண்டு, பழைய விஜயநகர கீர்த்தியை இன்னும் எத்தனை நாள் குங்குமம் வைத்த சம்புடம் போல் நினைத்துக் கொண்டிருப்பது?

வடக்கே சமுத்திரம் போல் மொகலாய ராஜ்யம். அருகே அசுர பலங்களில் சுல்தானிய ராஜ்யங்கள்! இவைகளினால் ஏற்கெனவே தன் பிரதேசங்கள் கபளீகரம் செய்யப்பட்ட பின்பு.

எஞ்சியுள்ள சில சீமைகளை மட்டும் வைத்துக்கொண்டு.

பெயருக்குச் சக்கரவர்த்தி என்று ஒப்புக் கொள்ளும் தமிழ் நாட்டு நாயக்கர்களையும் நம்பிக்கொண்டு,

எத்தனை நாள் இந்த விஜயநகர ராஜ்யம் வாழ முடியும்?

விஜயநகர ஊரே அதன் கையில் இல்லை. பெயர் மட்டும் விஜயநகர ராஜ்யம்!

இப்படி நாட்டு எல்லை குறைந்து, நாட்டு மாட்சிமை சிதைந்து போய்த் தனது வாழ்க்கைக்கே அல்லாடிக் கொண்டிருக்கும் ஒரு பலவீன ராஜ்யத்தில்

இன்று சிங்காதனத்துக்குச் சண்டை!

ராஜ கிரீடம் அணிவதற்காகச் சண்டை!

இன்று அல்ல, நேற்று அல்ல, பதினைந்து ஆண்டுகளாக நடக்கிறது.

ஒருவர் மாற்றி ஒருவர் ராஜாவாக வந்து போகிறார்கள்.

நாட்டின் க்ஷேமத்தைக் கவனிப்பதற்கு முன்பு தங்கள் சொந்தப் பாதுகாப்புக்கே சண்டை போட வேண்டி வருகிறது.

வாழ்நாள் முழுவதையும் சண்டையிலேயே கழிக்கிறார்கள். சீக்கிரம் அல்பாயுசிலேயே மடிகிறார்கள்.

இன்று இந்த வேங்கடருக்கே கடைசிக் காலம் வந்து விட்டதா?

பெருத்த நினைவுகளின் பின்னணியில் மனம் வெதும்பி அர்ச்சுனன் மன்னர் வேங்கடரைப் பார்க்க,

அவர் அப்போதுதான் கண் திறந்து அவனை அடையாளம் கண்டு கொண்டார்.

உடனே சற்றே தலையை நிமிர்த்தி ''அர்ச்சுனா, சண்டைக்குப் பிறகு உன்னைப் பார்க்க முடியவில்லை. சண்டையில் நீ செய்த உதவி எல்லாம் கேள்விப்பட்டேன். ரொம்ப சந்தோஷம். வாய் நன்றியைத் தவிர என்னால் வேறு விதத்தில் எதுவும் செய்ய முடியவில்லை. உனக்கு விஷயம் தெரியுமா?'' என்று மெல்லிய குரலில் கேட்டார்.

குரலில் ஒரு ராஜ கனிவு துளும்பியது. அவனை அணைத்துக் கொள்வது போல் ஓர் இதம் இருந்தது. ஒரு தந்தை முன்பு இருப்பது போன்ற பாசம் அவனுக்குத் தோன்றியது.

''மகாராஜா! நான் எங்கேயோ போய்ச் சிக்கிக்கொண்டேன். தங்கள் தொடர்பு இல்லாமல் இந்தச் சிறு புத்திக்காரன் இருந்து விட்டேன். இப்போது என்ன நேர்ந்திருக்கிறது சொல்லுங்கள், மகாராஜா!'' என்றான்.

''சந்திரகிரியை நாம் இழந்துவிட்டோம்'' என்றார் வேங்கடவர்.

அர்ச்சுனன் முகம் இரும்பு போல் இறுகியது.

கண்கள் அந்தக் கணமே கலங்கி, விழி நெடுக நீர் படிந்தது.

எதுவும் ஓடவில்லை.

ஒரு மகாராஜா முன்னால் இருக்கிறோம் என்பதையும் நினையாது விக்கி அழ ஆரம்பித்தான். அவனால் அடக்கிக் கொள்ள முடியவில்லை. ஒரு குழந்தை போல் தேம்ப ஆரம்பித்தான்.

மகாராஜா வேங்கடர் அவன் தலையை மெள்ளத் தடவிக் கொடுத்தார்.

''அர்ச்சுனா! அழாதே! எழுந்திரு! இப்போது நமக்கு அவசர வேலை இருக்கிறது. நேரமில்லை'' என்று கூறி அவன் முகத்தை நிமிர்த்தினார்.

தேம்பலைச் சற்று அடக்கிக் கொண்டு அர்ச்சுனன் தன் முகத்தைத் துடைத்தான். ''மகாராஜா! என்ன செய்ய வேண்டும்?'' என்று ஈரம் கலந்த குரலில் கேட்டான்.

''இனிமேல் நம் ராஜ்ய பரிபாலனத்துக்கு நாம் எங்கே போயிருப்பது? நாம் இருப்பதற்கு ஒரு நகரம் வேண்டுமே!'' என்றார் வேங்கடர்.

அவர் அப்படிக் கேட்பதே அவனுக்கு வருத்தத்தைக் கொடுத்தது.

எனினும் உணர்ச்சிகளை அடக்கிக்கொண்டு, ''தெற்கே ஏதாவது நாயகர் நகரத்தில் புக வேண்டியதுதானே, மகாராஜா!'' என்றான்.

வேங்கடர் மெதுவாகச் சிரித்தார். ''அர்ச்சுனா! பெயருக்குத்தான் அவர்கள் நம் குறு

---

**யாருடைய தந்தை?** **யாருடைய தாய்?**



இடப்புறம் இருப்பவர் பத்திரிகை உலகில் பிரபலமான ஒருவரின் தந்தை. அவர் யார்?

வலப்புறம் இருப்பவர், மகனின் திரைப்படம் வெற்றி பெற வேண்டும் என்பதற்காக மதுரை மீனாட்சி கோயிலுக்கு வந்து விசேஷ அர்ச்சனை செய்து திரும்பினார். யார் அவர்?

விடைகள் 54ம் பக்கம்



மன்னர்கள். நடைமுறையில் அவர்கள் ஏகச் சக்கிராதிபதிகள். விருப்பமிருந்தால் உதவி செய்வார்கள். இல்லாவிட்டால் வெறும் கையைக் காண்பிப்பார்கள். நாம் நம் மரியாதையைக் காப்பாற்றிக் கொள்வதுதான் நல்லது'' என்றார்.

''ஏன் மகாராஜா! யாராவது ஒரு நாயக்கர்கூட தங்களை உள்ளன்போடு நேசிக்க மாட்டார்களா?'' என்று கேட்டான் அர்ச்சுனன்.

''வேலூர் நாயக்கரிடம் போகலாம் என்று பார்க்கிறேன்'' என்றார் வேங்கடர்.

''ஆகா! அவர்தான் நமக்கு ஏற்றவர். என்றும் தங்கள் மீது அபிமானத்தோடு இருப்பவர்'' என்றான் அர்ச்சுனன்.

''நல்லது. அதைத்தான் நானும் தீர்மானித்தேன். இப்போது நேரமில்லை. இங்கே இருக்க இருக்க ஆபத்து. உடனே புறப்படுகிறோம். நீயும் வருகிறாய்!''என்றார் மாமன்னர்.

''இந்த அடியவனா?'' என்றான் அர்ச்சுனன்.

''ஆமாம் அர்ச்சுனா! போகும் வழியில் திம்மன் படை நிச்சயம் நம்மை வழிமறிக்கும். தேற்று மாலை அதனுடன் சண்டை போட்ட களைப்பில் நான் இருக்கிறேன். நீயும் உன் பரிவாரமும் வந்தால்தான் வழியில் சமாளித்துக் கொண்டு போக முடியும்.''

அர்ச்சுனன் வாயில் வார்த்தைகள் தவித்தன. அரசர் விருப்பம் என்றால் அது கட்டளை தான். அதை நிறைவேற்ற அவன் கடமைப் பட்டவன் மட்டுமல்ல, ஆயிரம் மடங்கு விருப்பம் உள்ளவன்.

ஆனால் சுவர்ணமுகியின் நினைவு தோன்ற, மனம் கலங்கியது. 'ஒரு பல்லக்குக் கொண்டு வருகிறேன்' என்று இதோ வந்தவன் திரும்பிப் போகவில்லை என்றால்...

அவன் யோசிக்க, அந்த அறை நிசப்தமாயிருக்க, மீண்டும் அவனுக்குக் கலக்கம்.

தனது கலக்கத்தை மகாராஜா தப்பிதமாக எடுத்துக் கொண்டால்...

அவரிடம் சுவர்ணமுகியைப் பற்றிச் சொல்லிவிட்டால்...

அதற்கு இது தருணமல்ல. சுற்றிவர ஆட்கள் இருக்கிறார்கள்.

தவிர சொன்னாலும் பிரயோசனம் என்ன? சுவர்ணமுகியை விட மகாராஜாவுக்குத்தான் இப்போது அதிக ஆபத்து. அவரைக் காப்பாற்றுவதுதான் முதல் கடமை.

''சரி, மகாராஜா புறப்படுவோம்!'' என்றான் அவன்.

சிறிது நேரத்தில் எல்லோரும் புறப்பட்டார்கள்.

அர்ச்சுனன் சாந்தோமேயிலும், மயிலாப்பூரிலும் கஷ்டப்பட்டுச் சேர்த்திருந்த பரிவாரம்தான் ராஜாவின் பரிவாரமாகப் போயிற்று.

அவன் தருவித்திருந்த ஒரே பல்லக்குத்தான் ராஜாவின் பல்லக்காகப் போயிற்று.



## 14-8-81, வெள்ளி, காலை மணி 10.

''கூடிய வரை கட்சி மேடைகளை நான் தவிர்ப்பதற்குப் பல காரணங்கள் இருக்கலாம்; 'கட்சி மேடைகளில் பேசுவதென்றால் இவருக்கு மிகவும் நடுக்கமாம்' என்று ''கௌசல்யா'' தாமாகவே ஒரு காரணத்தை கற்பித்து - 16-8-81 இதழ்; ஒரு சுற்று வந்த போது பகுதியில் — எழுதுவது அழகல்லவே'' என்று கல்கி ஆசிரியருக்கு 'ஃபோன் செய்து கூறினார் அமைச்சர் திரு விஜயசாரதி. கோபமாக அல்ல; சிரித்தவாறேதான்!

பரிவாரம் அவசரமுடன் புறப்பட,-திம்மன் படை குறுக்கிடுவதற்கு முன் அவர்கள் நெடுந்தூரம் போய்விட வேண்டுமென்று விருப்பம்— அர்ச்சுனன் சில கணங்களே தயங்கி ''வீரமாலி!'' என்றான்.

வீரமாலி அருகில் வந்தான்.

அவனைக் காட்டுக்குள் அனுப்பி சுவர்ணமுகிக்குப் பாதுகாப்பு அளிக்கலாம் என்று நினைத்தான் அர்ச்சுனன்.

ஆனால்,

இப்போது அரசர் இருக்கும் பரிதாப நிலையில், படை இழந்து, பலம் இழந்து தனியாக நிற்கும் தருணத்தில் நிச்சயம் அர்ச்சுனன் உதவி மட்டுமல்ல, நல்ல வீரர்கள் பலரின் உதவி அவருக்குத் தேவை.

''ஒன்றுமில்லை, வீரமாலி! மன்னரைக் கவனமாகப் பாதுகாத்துக் கொண்டு போவோம்!'' என்று மட்டும் கூறி,

குதிரையைச் செலுத்தத் தொடங்கினான் அர்ச்சுனன்.

''நீ ஒரு முட்டாள்! சர்வ முட்டாள்! ஒரு நாட்டை விட்டு இன்னொரு நாட்டுக்கு வந்தும் அறிவு இல்லை.''

என்று வசை பாடினான் பிரான்சிஸ் டே.

அவன் முன்னால் அந்தச் சுங்குவார் சத்திரத்தின் தரையில் ட்ரேக் ராஜர் பதில் ஏதும் சொல்லாமல் உட்கார்ந்திருந்தான்.

''அந்தப் பெண் ஒரு ராஜ குமாரி என்று ஏன் என்னிடம் முன்னமே சொல்லவில்லை? சொல்லியிருந்தால் அவள் வழிக்கு நான் வந்திருக்க மாட்டேனே! அதை விட்டு, என்னைக் கடற் கரையில் அவமானம் செய்தாய். சரி போகட்டும். அந்தப் பெண்ணை ஒரு இந்தியனிடம் ஒப்படைத்தேன் என்றாயே, யார் அந்த இந்தியன்?''

டே இன்னும் அதிக ஆத்திரமுடன் கேட்டான்.

''அவன் எனக்குத் தெரிந்தவன். தோதா என்று பெயர். நட்போடு பழகியவன்.''

''நட்பு! இந்தியரின் நட்பு என்பது எப்படிப்பட்டது என்று உனக்குத் தெரியாதா? இன்று ஒருத்தனுக்கு நட்பு, நாளை வேறு ஒருத்தனுக்கு நட்பு! பணமும் பலமும் உள்ள இடமெல்லாம் இந்த இந்தியர்கள் நட்பை மாற்றிக் கொண்டே இருப்பார்களே! உன் தோதா உனக்கு என்ன செய்தான்? உன்னிடமிருந்து அந்தப் பெண்ணை வாங்கிக் கொண்டு நட்போடு உன்னை வழியனுப்பினான். நீ திரும்பும் வழியில் இரவுக்கிரவே ஆட்களை அனுப்பி உன்னை மடக்க வைத்தான். நல்ல வேளை, பொருள் நஷ்டப்பட்டாலும் நீ உயிர் தப்பினாய்... இந்தச் சத்திரத்தில் உடம்பு சரியில்லாமல் எத்தனை நாள்தான் படுத்துக் கொண்டிருப்பாய், நான் பார்க்காவிட்டால் உன் கதி என்ன ஆகியிருக்கும்? ம்... எழுந்திரு! என்னோடு மசூலிப்பட்டணத்துக்கு வா! ஏதாவது வியாபாரம் செய்! ஊருக்கு நல்ல பிள்ளையாகத் திரும்பு... ம்.... எழுந்திரு!''

ட்ரேக் ராஜர் பலவீன உடம்பை மெள்ளத் தளர்த்தி எழுந்திருந்தான்.

டேயைப் பார்ப்பதற்கே கூச்சமாக இருந்தது; அச்சமாகவும் இருந்தது.

சத்திரத்தை விட்டு வெளி வந்து அந்தக் காஞ்சீபுரச் சாலையைப் பார்த்தான். டேயின் பரிவாரம் சற்று நீண்டு தெரிந்தது.

அதைப் பார்த்துவிட்டு, வெறுமையாக வானத்தைப் பார்க்க,

சுவர்ணமுகியின் உருவம் ஒரு மின்னல் தோற்றமாக ஒரு முறை சொடுக்கி மறைந்தது.

(தொடரும்)



விடை :

இடதுபுறம் ஓவியர் ஜெயராஜின் தந்தை திரு ஜே. எஸ். பெர்னாண்டோ

வலதுபுறம் பாரதிராஜாவின் தாய் மீனாட்சி அம்மையார்

— தகவல் : திசைமுத்து



# இன்ஸ்பெக்ஷன்!

அலிபூர் ரகீம்

ரூ 250/- பெற்ற
மூன்றாவது பரிசுக் கதை

அமரர் கல்கி
நினைவுச்
சிறுகதைப்
போட்டி '8

பஸ்ஸின் புகை, மூக்கைத் துளைக்க அடிக்க, புழுதி அரித்த கண்களைத் துடைத்துக் கொண்டே திருவாளர் முனுசாமியைப் பார்த்தார் டெப்டி இன்ஸ்பெக்டர்.

பார்வையின் அர்த்தத்தைப் புரிந்து கொண்ட முனுசாமி, ''போவலாமுங்களா சார்?'' என்றார் அடக்கத்தோடு. மனதுக்குள் முனுசாமிக்கு அவர் தம் கிராமத்தை இன்ஸ்பெக்ஷன் செய்ய வராமலிருந்தால் நன்றாயிருக்குமே என்ற நப்பாசை!

''எப்படி?'' என்று கேட்ட டெப்டிக்குத் தாமதிக்காமல் பதில் சொன்னார், முனுசாமி: ''நம்ம சைக்கிள்லேதான்!''

அரட்டவாடிக் கூட்டு ரோடு. மார்ச்சு மாத வெய்யில். புரசப்பட்டு ஓராசிரியர் பள்ளி இன்ஸ்பெக்ஷனுக்காக பஸ்ஸில் வந்து இறங்கிய டெப்டியை வரவேற்க வந்திருந்தவர் ஓராசிரியர் முனுசாமி.

காலை வெய்யிலே பாம்பு போல் சீறி ஏறிக் கொண்டிருந்தது. கூட்டு ரோடிலிருந்து அரட்டவாடி நாலு மைல். அங்கிருந்து புரசப்பட்டு இரண்டு மைல். பஸ் வசதியோ, சாலை ஒழுங்கோ இல்லை.

டெப்டி, சைக்கிளையே பார்த்துக்கொண்டு நின்றார்.

பழைய சைக்கிள். மெருகு வழுக்கையான மணி இருந்தது. ஆனால் அடிக்க உதவும் நாக்கின்முக்கால் பகுதி உடைந்து போய் இருந்தது. முன் பிரேக்கின் இணைப்புக் கம்பி, முடமாகித் தொங்கிக் கொண்டிருந்தது. பின் பிரேக்கின்கட்டை, இடுக்குக்குச் சமமாகத்தேய்ந்துபோய், முன்சக்கர பட்டன்கள் மழமழவென வாழைப் பழம் போல்... அதில் இரண்டு இடங்களில் பெரிய பேட்சுகள், ஒன்று நீட்ட வட்டத்தில், இன்னொன்று செவ்வக வடிவில். பின் சக்கரம் பரவாயில்லை. ஒரே ஒரு இடத்தில் மட்டும் இரை எடுத்த பாம்பு வயிறு... உள்ளே ஒரு துண்டு டயர் இருந்தது.



''என்'யா... இந்த வண்டி தாங்குமா?'' டெப்டி சந்தேகப்பட்டார். முனுசாமி உடனே இன்சல்ட் ஆகிவிட்டார்.

''என்னுங்க சார், இப்டிக் கேட்டுட்டீங்களே! பழைய இங்கிலீஷ் ராலி சார்...இதுல எனக்குப் பத்து வருஷ சர்வீஸ்... சும்மா ஒக்காருங்க சார்!''

முனுசாமி பவ்வியமாகச் சைக்கிள் கேரியரைத் துடைத்தார். டெப்டியின் கைப் பையை வாங்கி ஹேண்ட்பாரில் மாட்டிவிட்டு லாகவமாக ஏறி உட்கார்ந்தார். ''ஏறுங்க சார்!''

டெப்டி 'கடவுளே!' என ஏற முயலும் போது ஓர் எச்சரிக்கை: ''சார்! பாத்து ஏறுங்க... கேரியர் போல்ட்டு கொஞ்சம் லூசு... வெயிட்டை எல்லாம் முன்னியே போட்டு ஒக்காரணும்...''

''சரி...சரி!''

டெப்டிக்கு ஏக எரிச்சல். இப்படி எல்லாம் போய் இன்ஸ்பெக்ஷன் செய்ய வேண்டி இருக்கே! பத்திரமாக ஏறி உட்கார்ந்து விட்ட திருப்தியில் கண்களைச் சுழல விட்டார். மழைப் பசை காணாத கொல்லை மேடு... அங்கங்கே காய்ந்து நொடிந்து கிடந்த துவரைச்சருகுகள்...அறுவடையான சோளத்தின் கருகிய தாளடிகள். மண்ணையே மேய்வன போன்ற சில எலும்பு மாடுகள்... தலையைக் குனிந்து குனிந்து ஒன்றும் பெறாமல் நிமிர்ந்து ஓடிக் கொண்டிருந்த செம்மறி ஆடுகள்... கையில் தூரட்டோடு நடந்த ஓர் அரை நிர்வாணச் சிறுமி....

''தடக்...தடக்...தடக்...''

டெப்டிக்கு ரயில் பயண நினைவு வந்தது. போர்க்கின் வழியே ஊதல் டயர் பிரவேசிக்கும்போதும், 'பேச்' போட்ட பகுதி பூமாதேவியை அணைக்கும்போதும் வரும் அதிர்ச்சி, தண்டவாள இணைப்புக்களில், ரயில் ஏற்படுத்தும் அதிர்ச்சியைப் போல!·

'சே....! மனுஷன் பொணம் மாதிரி இருக்கானே!' வேர்வையைத் துடைத்துக் கொண்டார் முனுசாமி. நல்ல வேளையாகப் பள்ளிக் கூடத்தை ஜாக்கிரதையாக நேற்றே பெருக்கி விட்டிருந்தார். போனவுடன் பூட்டை இழுத்துத் திறக்க வேண்டும். மணி அடிக்க வேண்டும். அட்டெண்டன்ஸ் ரெஜிஸ்டரைத் தூசி தட்டி வைக்க வேண்டும். மூக்குறிஞ்சிப் பையன்களை ஒவ்வொரு வீடாய்ப் போய்க் கூப்பிட வேண்டும்..... கள்ளி பொறுக்க ஒருத்தன்... நண்டு பிடிக்க ஒருத்தன்... மாடு மேய்க்க ஒருத்தன்... இப்படிப் போய்விட்டவர்கள் போக மீதி எத்தனை பேர் சிக்குவானோ.... நாமதான் சொல்லி இருக்கோமே... மதியம் உப்புமாவு போடறதா... அதனாலே வந்துடுவாங்க. இருந்தாலும்...

முனுசாமியை ஏதோ ஒன்று பயமுறுத்தியது. அந்த நினைவு வந்த உடனே குப்பென வியர்த்து விட்டார். உடம்பில் ஒரு நடுக்கம். ஹேண்டில் கட்டு மீறித் திரும்ப, முன் சக்கரம் மணலில் வாட்டமாகப் போய்ப் புதைந்தது.

விழிப்பாக இருந்ததால் டெப்டி கீழே குதித்துவிட்டார். நீண்ட காலை ஊன்றிச் சமாளித்து நின்ற முனுசாமி அசடு வழியச் சிரித்தார்.

''என்னையா அது?'' — எரிந்து விழுந்தார் டெப்டி.

''மணல் சார்!'' அடக்கத்தோடு கூறிய முனுசாமி, இறங்கி சைக்கிளை நிமிர்த்தினார்.

''ஏன் ஓரமாய்ப் போனீர்?'' அதிகாரத் தோரணையில் அதட்டினார் டெப்டி.

''நடு ரோட்டு ஜல்லிக் கல்லு சார். கொட்டக் கொட்டையா... டயுள்கக்குக் கொஞ்சம் காத்து அதிகமா அடிச்சுட்டேன்.... டயர் நடு ரோட்டுலே தாங்காது சார்!''

டயரின் ஒட்டக முதுகுகள் டெப்டியைப் பயமுறுத்தின. முதுகில் வேர்வை அரிப்பு. முகத்தையும் கண்ணாடியையும் ஈரக் கைக்குட்டையால் துடைத்துக் கொண்டார். முன்பைவிட அதிகமாக அழுது வடிந்தது கண்ணாடி.

''இன்னும் எத்தனை மைலுய்யா?''

''இன்னும் மூணும் ரெண்டும் அஞ்சு மைல் சார்!'' டெப்டியின் பலவீனம் முனுசாமிக்கு இப்போது மெல்லப் புரிய ஆரம்பித்தது. ''இப்ப ஒரு மைலுதான் சார் வந்திருக்கோம்!''

''போய்டலாம்... ஏறுங்க சார்....!'' கொஞ்சம் வேகமாகவே மிதித்தார் முனுசாமி.

ஷூ போட்ட காலோடு கோபமாக ஓடி லபக்கென ஏறினார் டெப்டி.

தடார்....

என்ன நடந்தது? குதிகாலால் பிரேக் போட்டுத் திரும்பினார் முனுசாமி.

''யோவ்... யோவ்....!'' டெப்டி அலறும் ஞால். நடு ரோட்டில் இரண்டு கால்களை நீட்டிக்கொண்டு, இரண்டு கைகளைப் பின்னால் ஊன்றிய நிலையில் கிடந்தார் டெப்டி. ஸ்டேண்ட் இல்லாத சைக்கிளைக் கீழே படுக்கப் போட்டு விட்டு டெப்டியின் உதவிக்கு ஓடினார் முனுசாமி.

''என்ன சார்? அடிகிடி பட்டுதா?''

---

அருள்வாக்கு

## மதமாற்றமும் மேம்பாலமும்!

ரயிலடியில் பிரயாணிகள் வந்து இறங்கியதும் ஜட்காக்காரன், ரிக்ஷாக்காரன், டாக்ஸிக்காரன் என்று பலபேர் வந்து சூழ்ந்து கொள்கிறார்கள். எவனுடைய வண்டியில் ஏறிக்கொண்டாலும் போக வேண்டிய இடத்துக்குப் போய்ச் சேரலாம். வண்டிக்காரர்களை கிராக்கி பிடிப்பதற்காகப் போட்டி போடுவதைத் தவறு என்று சொல்வதற்கில்லை. அது அவர்கள் பிழைப்பு. ஆனால் கடவுள் என்கிற ஒரு லட்சியத்துக்கு அழைத்துச் செல்வதற்காக வெவ்வேறு மதஸ்தர்கள் போட்டி போட்டுக் கொண்டு மத மாற்றத்தில் முனைவது அர்த்தமற்ற காரியம்.



நதியின் மேல் பாலம் போட்டிருக்கிறது. அதில் பல வளைவுகள் இருக்கின்றன. எல்லா வளைவுகளும் ஒரே அளவாகக் கட்டப்பட்டவைதாம். ஆனால் ஒவ்வொரு வளைவுக்கும் கிட்டத்தில் இருப்பவனுக்கு அந்த வளைவே பெரிதாகவும் மற்றவை சின்னதாகவும் தெரியும். இப்படியே அந்தந்த மதஸ்தர்களுக்கும் தங்கள் மதமே பெரிதாகத் தெரிவதால், பிறரை அதற்கு அழைக்கிறார்கள். ஆனால் எல்லா வளைவுகளும் ஒரே அளவுதான். யாரும் தாங்கள் பிறந்த மதத்தை விட்டு விலக வேண்டியதில்லை.

மதங்களுக்கிடையே கோட்பாடுகளிலும் அநுஷ்டானங்களிலும் சில வித்தியாசங்கள் இருப்பதில் தவறில்லை. எல்லா மதங்களையும் ஒரேபோல் ஆக்க வேண்டிய அவசியமில்லை. ஒரே மாதிரி ஆக்காமல் எல்லா மதஸ்தர்களும் மனத்தில் ஒற்றுமையோடு இருப்பது தான் அவசியம். யூனிஃபார்மிடி அவசியமில்லை. யூனிடி இருப்பதே அவசியம்.

—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்

''ஒன்னுமில்லேய்யா!'' சிவந்துபோன உள்ளங் கைகளைப் பார்த்துக் கொண்டேபேசினார் டெப்டி.

''கேரியர் போல்ட்டு லூசு... பாத்து ஏறுங்கன்னு அப்பவே சொன்னேனே சார்!'' மிகுந்த பரிவோடு டெப்டியின் உடையில் பிடித்திருந்த தூசுகளைத் தட்டி விட்டார் முனுசாமி. வானத்தைப் பார்த்து வெள்ளிச் சிரிப்பு வீசிக் கொண்டிருந்த கண்ணாடியை எடுத்துத் துடைத்தார். ''நல்ல வேளை... கண்ணாடி உடையலே!''

கண்ணாடியை வாங்கி அணிந்துகொண்ட டெப்டி மறுபடியும் உள்ளங் கைகளைப் பார்த்துக்கொண்டார்.

''வாங்க சார்!'' முனுசாமி மீண்டும் சைக்கிளுக்கு அழைத்தார்.

''வேண்டாம்யா...''

''பின்னே எப்படி சார்?''

''சைக்கிளைத் தாய்யா. நான் ஓட்டறேன். நீ பின்னாலே ஒக்காரு.''

''இது தகாது சார்!'' பய பக்தியோடு கூறினார் முனுசாமி. ''நீங்க ஒக்காருங்க சார். நானு பாத்து ஓட்டறேன்...''

''குடுய்யா!'' — வெடுக்கெனப் பிடுங்கிக் கொண்ட டெப்டி ஏற ஆயத்தமாகும் போது, ''கொஞ்சம் இருங்க சார்!'' எனத் தடுத்தமுனுசாமி,கீழேயே பார்த்துக்கொண்டு நடந்தார். ரெண்டு வாஷர்கள்.. ஒரு நட்டு.. ஒரு போல்டு...பொறுக்கி எடுத்துக் கொண்டு சைக்கிள் அருகே போனார். பழைய பாம்பன் பாலம் போல 45 டிகிரி கோணத்தில் இருந்த கேரியரைத் தட்டி அடக்கினார். போல்டு வாஷர் நெட்டு ஆகியவை போட்டுத் திருகினார். நெட்டு இறுகாது எனத் தெரியும். இருந்தாலும் சுழன்று கொண்டே இருந்த அதைத் தனக்குத் திருப்தி ஏற்படும்வரை திருகிவிட்டு, ''போலாம் சார்'' என்றார்.

சைக்கிள் ஒரு பக்கமாகவே இழுத்தது. ''என்னையா ஒரே பக்கமா...'' ஆச்சரியத்தோடு கேட்டார் டெப்டி.

''அது அப்டித்தான் சார்... பேலன்ஸ் பண்ணி ஓட்டணும்...!''

''என்ன சைக்கிள்யா இது!'' டெப்டி சலித்துக் கொண்டார்.

''இங்கிலீஷ் ராலி சார்! இதுல எனக்குப் பத்து வருஷ சர்வீஸ்... வரப்பு மேலே கூட இதை ஓட்டுவேன்!''

''இதையா?'' டெப்டி சிரிக்க முயன்றார். இருமல் வந்தது. வழிந்து கொட்டிய வேர்வையைத் துடைக்க யோசித்தார். ஒரு கையை எடுத்தால், சைக்கிள் எங்கே பள்ளத்துக்கு ஓடுமோ எனப் பயந்தார்.

''என்னையா ரோடு!ஒரேகுழிப் பள்ளமா!''

''இது பரவாயில்லே சார்... அடுத்த மூணு மைலு இன்னும் மோசமா இருக்கும்.''

முனுசாமிக்கு வயிற்றைக் கரைத்தது.மனுஷன் சாமர்த்தியசாலியா இருக்காரே.. இன்னிக்கு இன்ஸ்பெக்ஷன் நடந்துடுமா? நெஞ்ச ஆழத்தில் ஒரு உறுத்தலான கனம்.

இப்போது சைக்கிள் மேட்டில் முக்கிக் கொண்டிருந்தது. டெபுடிக்கு மூச்சு இரைத்தது. நெற்றி வியர்வை கண்ணில் இறங்கி, கன்னத்தின் வழியே வாய்க்கு வந்து கரித்தது.

ஃபாரெக்ஸ்

கல்கி

குழந்தை பராமரிப்புப் போட்டி



# முடிவு

நடுவர்கள்:

1. டாக்டர் லக்ஷ்மி திரிபுரசுந்தரி
2. திரு ஃபெர்னாண்டோ, ஃபாரக்ஸ் நிறுவனம்
3. ஆசிரியர், கல்கி

''என் குழந்தையின் முதலாண்டில் ஏற்பட்ட இனிய அனுபவங்கள்'' என்ற தலைப்பில் கட்டுரை எழுதிப் பரிசுபெறும் தாய்மார்கள்:

முதல் பரிசு ரூ 500
ஸ்ரீமதி வைஜயந்தி கிருஷ்ணன்
எல் 1. பி. சர்வமங்களாகாலனி
அசோக்நகர், சென்னை — 83

இரண்டாம் பரிசு ரூ 300
ஸ்ரீமதி சபியா ராஜா
w/o ஆர். என். ராஜாசாயபு
584, பூந்தமல்லிஹைரோடு
சென்னை -- 29

இரண்டு மூன்றும் பரிசுகள் தலா ரூ 200

1 ஸ்ரீமதி கீதா கண்ணன்
325, வாயிட்ஸ் ரோடு, சென்னை-14

2 எம். சுமதி
22 பி. 38 வது கிராஸ்ரோடு, 8 வது பிளாக், ஜெயநகர், பெங்களூர்-41

நான்காம் பரிசு தலா ரூ 100 பெறுவோர்:

1. எம். ஷமீம் பேகம், ஆலங்கொம்பு
2. குந்தவி ராமச்சந்திரன், சென்னை-86
3. லக்ஷ்மி சங்கரன், பம்பாய்-22
4. டாக்டர் ராதிகா பாலகிருஷ்ணன், சென்னை-14
5. எஸ். ரமா சுப்பிரமணியன், தர்மபுரி
6. ராஜேசுவரி நீலகண்டன், நியூயார்க்
7. கே. எஸ். சுந்தரவல்லி, முத்தரச நல்லூர்
8. அல்லி சோமசுந்தரம், திருநெல்வேலி-7

முதல் பரிசு பெற்ற கட்டுரை கல்கி செப்டம்பர் 6ந் தேதி இதழில் பிரசுரமாகும். இரண்டாம் பரிசுபெற்ற கட்டுரை செப்டம்பர் 13ந் தேதி இதழில் இடம் பெறும்.

மற்ற பரிசு பெறும் கட்டுரைகளிலிருந்து ரசமான பகுதிகள் செப்டம்பர் 20ந் தேதி கல்கி இதழில் பிரசுரமாகும்.

பங்கேற்ற அனைவருக்கும் ஆறுதல் பரிசுகள் (புத்தகம்) அனுப்பி வைக்கப்படும்.

''கஷ்டமா இருக்கா சார்?''

''இல்லேய்யா...'' மீண்டும் இருமினார் டெப்டி.

''இந்த மாதிரி இன்னும் இரண்டு மேடு தான் சார் இருக்கு!''

முனுசாமி எதிர்பார்த்தபடி பதில் ஒண்ணும் வரவில்லை. டெப்டி விடாக்கண்டனாய் மிதித்துக் கொண்டிருந்தார். திடீரென முனுசாமிக்கு ஒரு யோசனை. கீழே குதித்தவர், பின்னிருந்து சைக்கிளைத் தள்ள ஆரம்பித்து விட்டார்.

''யோவ்... என்னய்யா இது!''

''பரவாயில்லே சார்... நீங்க கஷ்டப்பட்றது எப்படியோ இருக்கு....!''

மேடு வரை தள்ளிக் கொண்டு வந்த முனுசாமி, இறக்கம் வந்ததும் பலத்தை யெல்லாம் போட்டு ஒரு தள்ளுத் தள்ளிவிட்டு ஏறி உட்கார்ந்தார்.

''சார் அந்த ஓடைக்கரை வரையிலும் இனிமே ஒரே எறக்கந்தான் சார்...''

சர்ரென்ற வேகம். திடீரென உயர்ந்த இதயத் துடிப்பைப் போல் அந்தத் தடக்... தடம்! காதோரம் காற்றுச் சீறியது. டெப்டியின் உடம்பெல்லாம் அதிர்ந்தது. ஹேண்டில் பாரோடு அவர்கை அலைக்கழிய ஆரம்பித்தது.

நிலைமையை ஊகித்துக் கொண்ட முனுசாமி சரேலெனக் கீழே குதித்து விடுகிறார்.

சைக்கிள் பறக்கிறது.

''யோவ்....! பிரேக்....! பிரேக்....!''

டெப்டியின் அலறலுக்குப் பின்னால் ஓடிக் கொண்டே பதில் கத்துகிறார் முனுசாமி. ''குதிகால்! குதிகால்!''

''டமால்!'' அடுத்துச் சில நொடிகளில் இன்னொரு ''டமால்!''

ஓடைக் கரை ஓரம் இருந்த பெரிய சிமெண்ட் பைப்பில் மோதிச் சாய்ந்தது. சைக்கிள்.

ஓடைப் பள்ளத்தில் போய் விழுந்தார் டெப்டி.

சில நொடிகள் என்ன நடந்ததென்றே புலப்படவில்லை. மீண்டும் உணர்வு வந்த போது உலகமே நின்று நின்று சுற்றுவது போன்ற பிரமை.

**மனைவி : நாம மாசா மாசம் கொஞ்சம் பணம் மிச்சம் பிடிக்கலாம்னு எதை நிறுத்தறது?**

**கணவன் : அடுத்த வீட்டுக்காரி என்ன வாங்கறான்னு பார்க்கறதை நிறுத்து. —பிரியா பாலு**



போய் நொண்டலோடு வந்த முனுசாமி டெப்டியைத் தூக்கி நிறுத்துகிறார். காலை ஊன்றி ஊன்றி மெல்ல ரோட்டு ஓரம் வந்து நின்றார் டெப்டி.

''இப்ப என்ன சார் பண்றது... ரெண்டு வீலும் பர்ஸ்ட் ஆயிடுச்சி!''

டெப்டிக்கு ஆத்திரம் தலைக்கு ஏறியது.

''ஒம்ம சைக்கிளை அந்தப் பள்ளத்தில் போட்டுப் பொதச்சிட்டு நடவும்.''

அடப் பாவி!... இந்த மனுஷனுக்கு இன்னுமா இன்ஸ்பெக்ஷன் நினைப்பு?

''சார்... நடந்தா சார் வருவீங்க...?''

பரிவோடு கேட்ட முனுசாமியை எரித்து விடுவது போலப் பார்த்தார் டெப்டி.

தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு விதியே எனச் சைக்கிளைத் தள்ளிக்கொண்டு நடந்தார். காற்றில்லாத டியூபுகள் அடிக்கடி வெளியே வந்து சிரித்து முனுசாமியின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டன.

இனித் தப்ப வழி இல்லே.

வெந்து கரிக்கும் வெய்யிலில் அந்த ஒட்டைச் சைக்கிளின் முனகலைத் தவிர வேறு சத்தமே கேட்கவில்லை.

கொஞ்சம் ஆத்திரம் அடங்கின டெப்டி நடந்து கொண்டே கேட்டார்: ''இன்னும் ஒங்க சுடுகாட்டுக்கு எத்தனை மைலுய்யா?''

''அதோ... அந்த மோட்டுலேந்து சரியா மூணு மைலு சார்!''

டெப்டிக்கு இப்போது உள்ளுக்குள் விண்ணென்றது. இருப்பினும் வெளியே காட்டிக் கொள்ளவில்லை.

தூரத்தில் ஏதோ உறுமல் ஓசை... என்ன அது பஸ்ஸா? பத்தரை மணிக்குத்தானே செங்கம் பஸ்? ஒருவேளை ரிப்பேராகி லேட்டா கிளம்பி இருக்குமோ?

ஆர்ன் சத்தம் கேட்கிறது.

''என்னய்யா பஸ் வராப்பலே இருக்கு?''

''ஆமா சார்... பத்தரை மணிக்கே போய் விடுவான் கார்த்திகேயன் பஸ்... இன்னிக்கு லேட்டு போல இருக்கு.. இத உட்டா அடுத்து ஒரே ஒரு பஸ்ஸு தான்... ரெண்டே முக்கா ஆக்கு.... சீக்கிரமாப் போயி இன்ஸ்பெக்ஷன் முடிச்சித் திரும்பினா... ரெண்டே முக்கா கெடைச்சாலும் கெடைக்கும்... இப்ப மணி பன்னெண்டு...''

மளமளவென இயந்திர கதியில் ஒப்பு வித்தார் முனுசாமி.

ஹேண்டில்பாரிலிருந்த பையை வெடுக்கெனப் பறித்த டெப்டி, ரோடின் குறுக்காக ஓடிக் கையைக் காட்டினார். பஸ் நகர்ந்து கொண்டிருக்கும்போதே தாவி ஏறினார்.

''சார்...இன்ஸ்பெக்ஷன் சார்...'' பஸ்ஸின் பின்னால் ஓடினார் முனுசாமி.

''ரெக்கார்டெல்லாம் நாளைக்கி வீட்டுக்கு எடுத்தா!''

பஸ்ஸோடு தேய்ந்த குரலில் புளகாங்கிதம் அடைந்து நின்றார் முனுசாமி, நடு ரோட்டில்!

''கார்த்திகேயா... என்னைக் காப்பாத்தி விட்டப்பா!....''

இப்போது....?

ஓர் ஆரம்பப் பள்ளிக்கூடத்தின் ரெகார்டுகள் ஓ.கே. செய்யப்பட்டு விட்டன!

"ஹலோ!"

"பப்பட் ஜமால், குட்மார்னிங்!"

"கன்ஸ்யூமர் கார்டு நெம்பர் பி. ஜே. 279."

"ஓ! மிஸஸ் ருக்மிணி ஜெகந்நாதன், நெ. 9 சையத் காலனி முதல் தெரு, எக்மோர் தானே?"

"ஆமாம்மா. காஸ் தீர்ந்து போச்சு."

"இன்னிக்கே அனுப்பிடறோம். இல்லேன்னு நாளைக்குக் காலேல நிச்சயம் கிடைக்கும். போதுமா? ஆமாம், வீட்ல பாட்டி எப்படி இருக்காங்க?"

"நல்லா இருக்காங்க. உன்னை விசாரிச் சாங்க."

"பசங்கள் இரண்டு பேரும் ஸ்கூலுக்குப் போயாச்சா?"



# ஸுப்பர் ஃபைன் சாந்தி

"ம், இப்பத்தான் கிளம்பினாங்க."

அட, காஸ் ஸிலிண்டர் கேட்டு, போன் செய்தவருடன் இத்தனை நட்புடன் உரையாடுகிறாரே என வியப்பு!

இப்படி ஆச்சரியத்தில் மூழ்கடிப்பது யார் தெரியுமா? சென்னை எழும்பூர் பப்பட் ஜமால் அலுவலக டெலிபோன் ஆபரேட்டர் மிஸ் சாந்தி தான்.

74ம் ஆண்டு முதல் இங்கு பணியாற்றி வரும் சாந்திக்கு பப்பட் ஜமாலின் ஐந்தாயிரம் வாடிக்கையாளர்களில் சுமார் மூவாயிரம் பேருடைய பெயர், அட்ரஸ் மனப்பாடம்.

பள்ளிக்கூட நாட்களிலிருந்தே இவருக்கு ஞாபக சக்தி அதிகமா? என்றால் இவரது பதில்: "ஊகூம். அப்படியெல்லாம் இல்லே. சொல்லப்போனால் படித்த காலத்தில் படித்தது நினைவில் நிற்பதில்லையே என எண்ணி வருந்தியதுண்டு. ஆனால் இதில் எனக்கு ஆர்வம் ஏற்பட்டது. நாளடைவில் அது வளர்ந்தது. கன்ஸ்யூமர்களைப் பற்றி, அவர்களுடன் பேசி அறிந்து கொண்டேன். அவற்றை ஞாபகம் வைத்துக்கொள்ள ஆரம்பித்தேன்."

"போனில் இவ்வளவு உரிமையோடு பேசும் நீங்கள் அவர்கள் வீட்டுக்குப் போவதுண்டா?"

"இல்லே. என்னைப் பார்க்க வேண்டும் என்று யார் போன் செய்தாலும் 'ஆபீஸுக்கு வாருங்கள், பேசலாம்' என்று பதில் சொல்லி விடுவேன். ஆனால் ஒரே ஒருவர் வீட்டுக்குப் போயிருக்கிறேன். அதுவும் மானேஜர் அனுமதியுடன். அவர் ஒரு வயதானவர். நான் டெலிபோன் ஆபரேட்டராய் ஆன புதிது. அந்தப் பெரியவர் போன் செய்தார். அவருக்குக் காது மந்தம். "கொஞ்சம் பொறுமையாபேசும்மா" என்று கேட்டுக் கொண்டார். முடிவில் திருப்தி அடைந்து "இதே போல் எல்லாரிடமும் நடந்துக்கம்மா" என்றார்.

"எனக்குப் பொறுமை போதித்த அந்தப் பெரியவருக்கு உடம்பு சரியில்லே என்று தெரிய வந்த போதுதான் நான் போய் விட்டு வந்தேன்."

பல நேரங்களில் இவர் குரலே வைத்தே ஆளைக் கண்டுபிடித்து விடுகிறார். இது பற்றி ஒரு சுவையான நிகழ்ச்சியைச் சொன்னார்.

"சுப்புலட்சுமி என்று வேறு அலுவலகத்தின் டெலிபோன் ஆபரேட்டர். அடிக்கடி போனில் பேசுவோம். நேரில் பார்த்துக் கொண்டதில்லே. ஒரு நாள் நல்ல மழை. நான் ஒரு பஸ் ஸ்டாப்பில் நின்று கொண்டிருக்கும்போது, மழையில் நனைந்துகொண்டிருந்த இன்னொரு பெண்மணியையும் என் குடையின் கீழ் வரும்படி அழைத்தேன். அவர் 'தேங்க்யூ' என்றபடி வந்து நின்றார். எனக்கோ, 'இந்தக் குரல் எங்கேயோ கேட்ட மாதிரி இருக்கே' என்று தோன்ற நினைத்துப் பார்த்தேன். ஞாபகம் வந்தது. 'நீங்கள் சுப்புலட்சுமிதானே?' என்று ஆபீஸ் பெயரையும் சொன்னவுடன் அவர் ஆச்சரியப்பட்டு என்னை யார் என்று கேட்டார். சொன்னதும் ஞாபகசக்தியை உணர்ந்து பிரமித்தார்.

போனில், 'ஹலோ! சாந்தி! ஹௌ ஆர் யூ' என்று கேட்பவர்களுக்கு 'ஸுப்பர் ஃபைன்' என்று பதில் சொல்வதால்இவருக்கு 'ஸுப்பர் ஃபைன்' என்று பட்டப் பெயர்.

ஐந்து பெண்கள், இரண்டு பிள்ளைகள் கொண்ட குடும்பத்தின் மூத்த பெண். தற்போதுள்ள ஐயாயிரம் வாடிக்கையாளர் விலாசங்களையும் ஞாபகம் வைத்துக் கொள்ள வேண்டும் என்பது இவர் ஆசையாம். ஒரு நாளைக்குச் சுமார் அறுநூறு போன் கால்களுக்குப் பதில் சொல்கிறார்.

"உங்கள் வாடிக்கையாளர்களில் வி.ஐ.பி.க்கள் யார் யார் இருக்கிறார்கள்?" என்றால், "ஒவ்வொரு கன்ஸ்யூமருமே எங்களுக்குவி.ஐ.பி.தான்" என்று கூறும் சாந்தியை டெலிபோன் ஆப்பரேட்டராய்க் கொண்டிருப்பது பப்பட் ஜமால் நிறுவனத்தின் அதிருஷ்டம்!

-கலா மூர்த்தி

போட்டோ: இமேஜ் போட்டோகிராபிக்ஸ்

**திருத்தலம் கண்டேன்**



# ஆண்டகை ஆற்றிய அற்புதங்கள்!

நாகை. ஜி. அஹமது

என் குடும்பத்தார் நாகூர் ஆண்டகை திருத்தலமாகிய நாகூரில் வசித்து வருகின்றனர். நான் சென்னையில் இஸ்லாமிய மாத இதழ் அலுவலகம் ஒன்றில் பணிபுரிந்து வருகிறேன்.

நாகூரில் ஆண்டுதோறும் நடைபெறும் நாகூர் ஆண்டகை கந்தூரி விழாவினைக்கண்டு தரிசித்து வருவது வழக்கம். அதன்படி நாகூர் ஆண்டகை கந்தூரி உற்சவ விழா காணச் செல்வதற்காக 12-4-81ம் தேதி பகல் 11-30க்குச் சென்னையிலிருந்து புறப்பட இருக்கும் சொகுசு பேருந்துக்கு ஒரு டிக்கெட் ரிசர்வ் செய்திருந்தேன். 11.20க்குத்தான் பஸ் வந்து சேர்ந்தது. என் பெட்டிகளைப் பேருந்தில் வைத்துவிட்டு என் இருக்கைக்குப் பக்கத்து இருக்கையில் அமர்ந்துள்ள சக பயணியிடம் 'டீ' சாப்பிட்டுவிட்டு வருவதாகச் சொல்லிச் சென்றேன். திரும்பி வரும்போது நான் புறப்பட வேண்டிய பஸ்ஸைக் காணோம். எனக்கு அதிர்ச்சியாகி விட்டது. அங்கு நின்றவரிடம் வினவினேன். 'சரியாக 11.30க்குச் சென்றது; புறப்பட்டு ஐந்து நிமிஷம் கூட ஆகியிருக்காது' என்றனர். அப்பொழுது என்னைப் போல் மற்றொரு பயணியும் நின்றுகொண்டு வழியறியாது தவித்துக் கொண்டிருந்தார்.

எனக்குக் கையும் ஓடவில்லை, காலும் ஓடவில்லை. விசாரணைக் கவுண்டருக்கு ஓடிச்சென்று முறையிட்டேன். என் நிலையை உணர்ந்த அந்த நல்ல மனிதர் ''ஸார், நீங்க ஒண்ணும் கவலைப்பட வேண்டாம். நான் டி. நகர் டிப்போவுக்குப் போன் செய்து விவரம் கூறி அந்தப் பேருந்தைக் கிண்டி பஸ் ஸ்டாப்பில் நிறுத்தச் சொல்கிறேன். நீங்கள் இருவரும் ஒரு ஆட்டோவில் ஏறி பீச் வழியாகக் கிண்டிக்குச் சென்று உங்களுடைய வண்டியை அடையலாம்'' என்று கூறி எங்களை ஒரு ஆட்டோவில் ஏற்றி அனுப்பினார்.

ஆட்டோ வெகு வேகமாக மெரினாவை நோக்கி ஓடிக் கொண்டிருந்தது.

திடீரென்று ஓட மறுத்து நின்றுவிட்டது. எதிரே மற்றொரு ஆட்டோ வர, அதில் ஏறி மறுபடியும் கிண்டியை நோக்கிப் புறப்பட்டோம்.

இரண்டாவது ஆட்டோ எந்த விதத் தொல்லையும் இல்லாமல் விரைவாக ஓடியது. டிரைவர் நல்ல சாமர்த்தியசாலி. தம் திறமையால் கிண்டியை நெருங்கிக்கொண்டிருந்தார். அங்கு ஒரு ஓரமாக நாங்கள் செல்ல வேண்டிய சொகுசு பேருந்து எங்களை எதிர்பார்த்து நின்றுகொண்டிருந்தது.

ஒரு வழியாகக் கிண்டி வந்து அந்தப் பேருந்தைப் பிடித்து விட்டோம். எங்கள் வண்டியின் நடத்துனர், ''என்ன ஸார்! என்னிடம் ஒரு வார்த்தை சொல்லிக் கொண்டு சென்றிருந்தால், இவ்வளவு கஷ்டம் ஏற்பட்டிருக்காது அல்லவா?'' என்றார்.

தென்னகத் திருத்தலங்களுக்குள் தனிப் புகழுடன் திகழ்வது நாகூர் தர்க்கா! சாதி,



நாகூர் தர்காவில் ஐந்து மினாராக்கள் தோற்றம்

சமய வேறுபாடின்றி உலக மக்கள் எல்லாம் ஒருங்கே கூடி நின்று, நல்லருள் நாடும் புண்ணியத் தலம் இது! இங்கே எழுந்தருளியிருக்கும் ''மெய்ஞ்ஞானப் பேரொளி'' செய்யது அப்துல் காதர் ஷாஹுல் ஹமீது நாயகம் அவர்கள், ''நாகூர் ஆண்டகை'' என்று நானில மக்களால் நாவாரப் போற்றப்படுகின்றார்கள்.

நாகூர் ஆண்டகை அவர்கள் உத்தரப் பிரதேசத்தில் அலகாபாத்திலிருந்து 96 கி.மீ. தொலைவில் உள்ள மாணிக்கப்பூரில் கி.பி. 1490ல் பிறந்தார்கள். நாடுகளெங்கும் சுற்றி நல்வழி காட்டி வந்த நாயகம் அவர்கள், தமது 40வது வயதில் நாகூர் வந்தடைந்தார்கள். 28 ஆண்டுகள் நாகூரிலேயே தங்கியிருந்து, அவர்கள் நற்பணி புரிந்தார்கள். இவ்வுலகில் 68 ஆண்டுகள் மட்டுமே வாழ்ந்த நாகூர் ஆண்டகை அவர்கள் கி.பி. 1558ல் மறைவுற்றார்கள்.

நாகூர் ஆண்டகை வாழ்ந்தபோதும், மறைந்த பிறகும் ஆற்றிய அற்புதங்கள் ஆயிரக்கணக்கானவையாகும். அவரது அருட்செயல்களால் அதிகம் மகிழ்ந்து பல்வேறு அன்பர்கள் எழுப்பிய கட்டிடமே தற்போது எழிலோடு விளங்கும் தர்க்காவாகும். தமது நோயைப் போக்கியதற்காகத் தஞ்சை மன்னர் அச்சுதப்ப நாயக்கர் அளித்த ஐந்து வேலி நிலத்தில் நாகூர் தர்க்கா கட்டப்பட்டது.

நாகூர் தர்க்காவுக்கு அழகூட்டும் ஐந்து மினாறாக்களும் ஐவேறு அன்பர்களால் கட்டப்பட்டதாகும். 77 அடி உயரமுள்ள ''சாஹிபு மினாறா'' எனப்படும் முதல் மினாறாவைச் செஞ்சியைச் சேர்ந்த ''இபுராஹிம் கான்'' என்பவரும், 93½ அடி உயரமுள்ள ''தலைமாட்டு மினாறா''வை நாகை நல்ல செய்யது மரைக்காயர் என்பவரும், 93½ அடி உயரமுள்ள ''முதுபக் மினாறா''வை நாகை பீர் நெய்னார் என்பவரும் 80 அடி உயரமுள்ள ''ஒட்டு மினாறா''வைப் பரங்கிப்பேட்டை நிஜபதி தாலுக்கான் என்பவரும் 131அடி உயரமுள்ள ''பெரிய மினாறா''வைத் தஞ்சை மன்னன் பிரதாப் சிங்கும் கட்டித் தந்துள்ளனர்.

இவைதாம் நாகூர் தர்காவுக்கு எழிலூட்டும் ஐந்து மினாறாக்கள்!

அதோ, தர்க்காவுக்கு வெளியே கம்பீரமாய்க் காட்சியளிக்கிறதே, அதுதான் பெரிய மினாறா! அதன் அழகைப் பாருங்கள்! மேகத்தைத் தழுவும் மினாறா! அதன் எழில் மாடங்கள் அவற்றிலே குடிகொண்டிருக்கும் மாடப்புறாக்கள்! வெடிச் சத்தம் கேட்டதும் அந்தப் புறாக்கள் வானைச் சுற்றி வலம் வரும் காட்சி!

இந்தப் பெரிய மினாறாவின் எழுச்சியிலே ஒரு வரலாறே அடங்கியிருக்கிறது. பிள்ளைக் குறை போக்க நாகூராரின் அருள் நாடித் தஞ்சை மன்னர் பிரதாப் சிங் தம் மனைவியோடு இங்கே வந்தார்.

அப்போது....!

''எனக்குப் பிறகு இந்தத் தஞ்சைத் தரணியைக் கட்டி ஆள எனக்கோர் மகனில்லை. ஷாஹுல் ஹமீது அரசே! சந்ததியற்ற எனக்கு ஒரு வாரிசை நீங்கள்தான் வழங்க வேண்டும்'' என மெய்யுருக வேண்டினார் தஞ்சை மன்னர் பிரதாப் சிங்.

மேலும், ''ஞானப் பேரொளியே! எனக்கென்று ஒரு மகன் பிறந்தால் இந்தத் தர்க்காவிலேயே பெரிய மினாறாவை நான் கட்டுகிறேன். மேலும், சில கிராமங்களையும் மான்யமாகத் தருகிறேன். கருணைக் கடலே! என் பிள்ளைக் கலியைத் தீர்த்து வையுங்கள்!'' என்று உணர்ச்சிவசப்பட்டுக் கூறிக் கண்ணீர் வடித்தார் தஞ்சை மன்னர்.

எல்லார்க்கும் எல்லாமும் தரும் நாகூரார் தஞ்சை மன்னன் பிரதாப் சிங்கின் ஆசையையும் ஈடேற்றி வைத்தார். நாகூர் ஆண்டகை அருளால், அவருக்குப் பிறந்த மகனே துளசிராஜன். அவர் பிறப்பால் அகம் மகிழ்ந்து பிரதாப் சிங் கட்டி வைத்த கோபுரமே பெரிய மினாறா! உலகின் எந்தப் பகுதியிலும் இப்படியொரு மினாறாவைப் பார்க்க முடியாது. அது நாகூரின் தனிச் சிறப்பு.

✠ தஞ்சை மன்னன் பிரதாப் சிங் கட்டிய நாகூர் தர்காவின் பெரிய மினாறா





# வட்ட மேஜை



● ''அவசரச் சட்டம் அவசியமே'' தலையங்கம் பிரமாதம். 'அட்சர லட்சம் பெறும்' என்று யாரோ ஒரு மகராஜன் கூறிவைத்தது உங்கள் தலையங்கத்துக்குச் சாலப் பொருந்தும். இந்திரா காந்தி அம்மையாரின் அவசர நிலைப் பிரகடனத்தை, வாரிசு உருவாக்கும் திட்டத்தை எதிர்த்த நீங்கள் இந்தத் தலையங்கத்தின் மூலம், நீங்கள் அம்மையாரின் எதிரி அல்ல, அவர் தம்-சுயநல ஆணவப் போக்கின் எதிரியேயன்றித் தேச நலப் போக்கின் மிகப் பலமான ஆதரவாளரும் கூட என்பதை நிரூபித்து விட்டீர்கள். பாராட்டத் தெரிந்தவர்கள் பாராட்டட்டுமே.

திருமங்கலம் — கே. நாராயணன்

● அவசரத்தில் எழுதப்பட்ட தலையங்கம் கண்டு அனுதாபப்படுவதா அல்லது வரப் போகும் எமர்ஜன்ஸி காலத்தில் அரசுக்கு 'ஜால்ரா' போட்டுப் பிழைக்க அஸ்திவாரமிடுவதாக நினைத்து வேதனைப்படுவதா?

கறுப்புப் பண முதலைகளுக்கும், கள்ளச் சந்தைக்காரர்களுக்கும் லஞ்ச ஊழல்காரர்களுக்கும் மறைமுகமாகத் துணை போகும் இந்த அரசு, பொருளாதாரத்தை மேம்படுத்த ஏழைத் தொழிலாளர்களின் உரிமையில் கை வைப்பது வேடிக்கையாக உள்ளது.

தேச பக்தி மிக்க தொழிலாளி தன்னைவிடக் குறைவாக ஊதியம் வாங்குபவனைப் பார்த்து ஆறுதல் அடையலாம். ஆனால் தனது உழைப்பின் பலனை நிர்வாகத்தில் இருப்போர் தவறான வழிகளில் அடைவதைப் பொறுத்துக்கொள்ள முடியாது.

தொழிலாளர் விரோதப் போக்கு தனியார் துறை நிறுவனங்களை விடப் பொதுத் துறை நிறுவனங்களிடமே மிகுந்து காணப்படுவதை என்போன்ற பொதுத் துறை நிறுவன ஊழியரே உணர முடியும்.

சுமுகமான நிர்வாகம் — தொழிலாளர் உறவினால் மட்டுமே உற்பத்தியைப் பெருக்க முடியுமே தவிர இது போன்ற அடக்குமுறைச் சட்டங்களால் அல்ல.

தேச விரோதிகளிடமிருந்து அரசியல் கட்சிகள் கோடிக் கணக்கில் வாங்கும் நன்கொடைகளும், அரசியல்வாதி பெறும் லஞ்சமும், இவற்றுக்கு வழி வகுக்கிற பெர்மிட், லைசென்ஸ் கண்ட்ரோல்களுமே நாட்டின் இன்றைய பொருளாதாரச் சீர்கேட்டுக்குக் காரணம்.

நெய்வேலி — எம். ராமலிங்கம்

● வேலைநிறுத்தத் தடை அவசரச் சட்டம் பற்றிய கார்டூன் அபாரம்! கலைஞர் அதை எதிர்க்க முடியாமல், தமிழக முதல்வர் மட்டும் அதைத் தவறாகப் பயன்படுத்துவார் எனக் குமுறுவதாகச் சித்திரித்துள்ளது மிக அருமை.

மதுரை — நாகுவேலன்

● இந்தச் சட்டமே வேண்டாம். ஒரு தொழிற்சாலைக்கோ, ஒரு நிறுவனத்துக்கோ ஒரே ஒரு தொழிலாளர்யூனியன்தான் அமைய வேண்டும் என்று சட்டம் செய்துவிட்டால் போதும். விரோத உணர்வுகள் மறைந்து உற்பத்தி அதிகரிக்கும்.

பெங்களூர்-5 — அ. குமார்

● சொர்க்கத்தின் திறப்பு விழாவுக்கு ஒரு பக்கத்தை வீணடித்த உமக்கு நரகத்தின் வாசல்தான் திறக்கப்படும்!

கொசவம்பட்டி — பி. வி. அசோகன்

● சோ(க) மங்கலம் கட்டுரை கண்டேன். சோமங்கலம் சொர்க்கபுரியாகிவிடும், அமரம்பேடு ஆனந்தபுரி ஆகிவிடும் என்று ஆசைக் கனவுகள் கண்ட எங்களுக்கு ஏற்பட்ட ஏமாற்றத்தின் பிரதிபலிப்பாக ''ஆர்ப்பாட்டமாக ஒரு மாளிகையை எழுப்ப முயன்றார்கள். அஸ்திவாரமே நிறைவடையவில்லை'' என்ற ஆணித்தரமான வார்த்தைகள் விளங்குகின்றன. எங்கள் பத்துக் கிராம மக்களின் மனத்திலிருப்பதைப் படம் பிடித்துக் காட்டியமைக்கு நன்றி! ஆறுதலடைகிறோம்.

அமரம்பேடு — புருஷோத்தமன்

● ''சோமங்கலம் திறந்தவெளி திரையரங்கில் புல் மண்டி, பாம்பும் தேளும் நெளியுமாம்'' என்று எழுதியிருக்கிறீர்கள். நான்தான் திறந்த வெளித் தியேட்டரின் ஆப்பரேட்டர். விஷயத்தைச் சரிபார்த்து எழுத வேண்டாமா? நேரில் வந்து பாருங்கள்.

சோமங்கலம் — டி. முருகன்

● அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் முதல், இரண்டாவது பரிசு பெற்ற கதைகளைப் படித்தேன். அபூர்வ ஆற்றலுடன் எழுதப்பட்ட இக்கதைகளை எப்படித்தான் முதலாவது, இரண்டாவது எனத் தரம் பிரித்தீர்களோ?

திம்மராஜபுரம் — என். ராமகிருஷ்ணன்

● பிரபல திரைப்பட ஒளிப் பதிவு நிபுணர்கள் வண்ணத்தில் கொண்டு வரும் 'எஃபெக்டை'த் தமது தூரிகையில் உருவான கறுப்பு வெளுப்பு படத்திலேயே கொண்டு வந்துவிட்டார் திரு ஜமால். 'அட்டலஸ் டேஷன்' கதைக்குப் படம் ஏ. ஒன்.!

600 035 — சி. பூபால் சிங்

'விபத்து இல்லாத ரயில்வே' படித்தேன். நமது ரயில்வேயையும், ஜப்பானிய ரயில்வேயையும் நினைத்தால்? ஹூம்! பெருமூச்சுத்தான் வருகிறது.

பெருங்களத்தூர் — எல். ரவிசங்கர்

# கடுகு பதில்கள்

✠ நரேந்திரன், பாரக்பூர்

கே: நட்பு - விளக்கவும்?

ப: இதென்ன, நட்பு என்பது என்னவோ புரியாத வார்த்தை மாதிரி கேட்கிறீர்களே. நட்பு என்பது இரு வழிப் பாதை. நட்பு என்பது ஜாதி, மதம், செல்வம், பதவி போன்றவைகளைக்கடந்து நிலைப்பது. நட்பு என்பது பாங்கில் அக்கௌண்ட் வைப்பது போன்றது. தொடர்ந்து பணம் வாங்கிக் கொண்டே இருக்க முடியாது. — அவ்வப்போது பணம் போடாவிட்டால்.

✠ ஆர். அரிகோபி, குடியாத்தம்

கே: சிவசங்கரி, வாஸந்தி ஒப்பிடவும்?

ப: மேலெழுந்தவாரியாக எனக்குப் புலப்படுகிற ஒரு விஷயத்தைச் சொல்கிறேன். சிவசங்கரிக்கு நிறைய ஆண் வாசகர்கள் விசிறிகள். வாஸந்திக்கு நிறையப் பெண் வாசகர்கள் விசிறிகள்.

✠ க. தியாகராசன், நெய்வேலி

கே: தங்களுக்கு எம். பி. பதவி இனிக்கப்பட்டால் என்ன செய்வீர்கள்?

ப: இனிப்பதை மந்திரி பதவியாகத் இனியுங்கள் என்று கெஞ்சுவேன்!

✠ ந. சேதுராமன், கொடுமுடி

கே: செலவு இல்லாமல் பொழுது போக்க ஒரு வழி?

ப: ஆண்டவனைத் தியானம் செய்யுங்கள்.

✠ வெ. பாலசந்திரன், கல்கத்தா 26

கே: பாரதிக்குக் காணிக்கை அளிக்கும் வகையில் கண்ணதாசன் நூறு கவிதைகள் எழுதப் போகிறார்? நீங்கள்?

ப: பாரதிக்குக் காணிக்கை அளிக்கும் வகையில் நான் நூறு கவிதைகள் எழுதப் போவதில்லை!

✠ பி. எஸ். சௌந்தரராஜன், குரோம்பேட்டை

கே: இப்போது பணத்திற்கு மதிப்பா, குணத்திற்கு மதிப்பா?

ப: பணம் இருக்கிறவனிடம் எல்லா கல்யாண குணங்களும் இருக்கும் என்று பணம் இல்லாதவர்கள் சர்டிபிகேட் கொடுக்கத் தயாராக இருப்பதால், பணத்துக்குத்தான் மதிப்பு அதிகம். பணத்தால் குணத்தைக் கூட விலைக்கு வாங்கிவிட முடியும்!

✠ எஸ். கணேசன், மீனாட்சிபுரம்

கே: வேலைநேரத்தில் ஆபீசில் பத்திரிகை முதலியவை படிப்பவர்களைக் குறித்து என்ன சொல்கிறீர்கள்?

ப: என்னை எதற்குச் சுயநிந்தனை செய்யச் சொல்கிறீர்கள்?

✠ க. ந. சுப்ரமணியன், நாகர்கோவில்

கே: சமீபத்தில் 'கல்கத்தா மிக்கி' எழுதிய இரண்டு ஜோக்குகள் கல்கியில் வந்துள்ளன. இந்த ஜோக்குகள் பழைய கல்கியிலிருந்தே களவாடப்பட்டவை. இது தவறில்லையா?

ப: தவறுதான். ஆசிரியர்கள் எல்லாவற்றையும் நினைவில் வைத்துக்கொள்ள முடியாது. தங்களைப் போன்ற வாசகர்கள் இருக்கிறார்கள் என்பதை மிக்கிகள் உணர வேண்டும். போகட்டும், மிக்கி ஸார். உங்கள் விளக்கம் என்ன?

பரிசு பெறுபவர் :

க. ந. சுப்ரமணியன்
பத்மாபவனம், சகோதரர் தெரு நாகர்கோவில்—629001

# அன்னை ஆடும் கூத்து

புயலைப்பற்றி ஒரு பாட்டும், பிரபஞ்சத்தின் அழிவுக்குக் காரணமான ஊழிக் கூத்தைப் பற்றி ஒரு பாட்டும் பாரதியார் பாடியிருக்கிறார்.

மழையைப் பற்றியோ புயலைப் பற்றியோ பாரதியார் பாடினாரென்றால், அப்பாட்டிலே மழை ஒலியையும் புயல் ஓசையையும் காட்ட முயன்றாரென்றால் மழையையும் புயலையும் அவர் பார்த்திருக்கிறார். ஆனால் நாம் பார்த்திராத-நாமென்ன, மனித குலமே கண்டிராத—ஊழிக் கூத்தைப் பற்றியும் அவர் பாடியிருக்கிறார். முன் எப்போதோ, முதலாவது, இரண்டாவது மூன்றாவது எனப் பல கடற் கோள்கள் வந்து பழந் தமிழகத்தைக் கொள்ளை கொண்டதாக இலக்கியங்



"நெஞ்சுக்கு நீதியும் தோளுக்கு வாளும்
நிறைந்த சுடர் மணிப் பூண்
பஞ்சுக்கு நேர் பல துன்பங்களாம், இவள்
பார்வைக்கு நேர் பெருந்தீ"

களிலே குறிப்புகள் காணப்படுகின்றன. இந்தக் குறிப்புக்களை வைத்துக் கொண்டு ஊழிக் காலத்தில் எழும் சர்வ நாச ஒலியைக் கவிதை ஒன்றிலே பாரதி காட்ட முயல்கிறார்.

"ஊழிக் கூத்து" என்பது கவிதையின் தலைப்பு.

வெடிபடுமண்டத் திடிபல
  தாளம் போட — வெறும்
வெளியிலிரத்தக் களியொடு
  பூதம் பாடப் — பாட்டின்
அடிபடு பொருளுன்
  அடிபடு மொலியிற் கூடக்—களித்
தாடுங் காளி, சாமுண்டீ; கங்காளி!
அன்னை, அன்னை,
ஆடுங் கூத்தை
  நாடச்செய்தாய் யென்னை"

ஆம்; ஊழிக் காலத்து நிகழ்ச்சிகளை அன்னை பராசக்தி பாரதியின் கண்கள் காணக் காட்டினளாம். அதனால் அந்தக் காட்சியினை அவன் கவிதையாகப் படைத்தானும். இன்னும் சொல்லுகிறான் ஊழிக் காலத்தின் கோலத்தை!

"சக்திப்பேய்தான் தலையொடு
  தலைகள் முட்டிச் சட்டச்
சடசடசட்டென் றுடைபடு
  தாளங் கொட்டி — அங்கே
எத்திக்கினிலும் நின்விழி
  யனல்போ யெட்டித் — தானே
எரியுங் கோலம் கண்டே சாகுங் காலம்
  அன்னை, அன்னை
ஆடுங் கூத்தை
  நாடச் செய்தாய் என்னை"

"பாழாம் வெளியும் பதறிப்
  போய்மெய் குலையச் — சலனம்
பயிலும் சக்திக் குலமும்
  வழிகள் கலைய — அங்கே
ஊழாம் பேய்தான்
  "ஓஹோஹோ ஹோஹோ" வென்
  றலைய, — வெறித்
துறுமித் திரிவாய்
  செருவெங்கூத்தே புரிவாய்]
அன்னை, அன்னை
ஆடுங் கூத்தை
  நாடச் செய்தாய் என்னை."

இந்தப் பாட்டைப் பாரதியார் தாமே பாடிக் காட்டுவாராம்! பாடி மட்டுமா? ஊழிக் கூத்தை ஆடிக் காட்டியும் தமது நண்பர்களை மெய்மறக்கச் செய்வாராம். இயற்கைக் கவிஞன் ஒருவனுக்குத்தான் இது சாத்தியம். இறையருளைப் பெற்றவனுக்குத்தான் இது கைவசமாகும். இந்தப் பாட்டையும் இதிலே மறைந்துள்ள கூத்தையும் அனுபவிப்பதற்கு இறையருள் வேண்டும். பாட்டின் பொருளைப் புரிந்து கொள்ளத் தமிழ்ப் புலமை மட்டும் போதாது; ஆன்ம ஞானமும் வேண்டும்.

(மயிலை இலக்கிய வட்டம் பாரதிய வித்யாபவனச் சொற்பொழிவிலிருந்து)

— ம.பொ.சி

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543) Editor: K. Rajendran